# உங்களுக்கேற்ற டீ



# ப்ளாண்டர்ஸ் டீ




ப்ளாண்டர்ஸ் ஸ்பிரிங்டேல் பச்சை லேபிள் டீ அதன் உயர்ந்த ரகத்திற்காக ஏற்கனவே பிரபலமடைந்திருக்கிறது. உயரமான நீலகிரியில் வளர்க்கப்பட்ட தேர்ந்தியான தேயிலைகளில் பொருக்கி எடுத்து தேர்ச்சி பெற்ற ஐரோப்பியர்களின் மேற்பார்வையில் பதப்படுத்தப்பட்ட பச்சை லேபிள் டீ தான் உங்களுக்கு ஏற்றது.

ப்ளாண்டர்ஸ் பச்சை லேபிள் டீ அனியுங்கள்.

**அது உயரத்தில் வளர்க்கப்பட்டது**

**ஸ்ரீ ப்ளாண்டர்ஸ் கம்பெனி லிட்.,**

கூடலூர், நீலகிரி, தென் இந்தியா.

PK-5TM




மலர் 5 இதழ் 38 | 1946 ஏப்ரல் 28 | வியஹ சித்திரை 16





"நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் உயிரோடிருக்கிறாரா, இல்லையா?" என்ற பிரச்னை சில காலமாகத் தீவிரமாக விவாதிக்கப்பட்டு வருகிறது. உயிரோடிருந்தால் எங்கே இருக்கிறார், மஞ்சூரியாவிலா, ருஷ்யாவிலா, துருக்கிஸ்தானிலா, ஆப்கானிஸ்தானிலா அல்லது நமது இந்திய தேசத்திலேயே ஓடிக்கொண்டிருக்கும் ரயிலில் அவர் மாறு வேடத்துடன் பிரயாணம் செய்து கொண்டிருக்கிறாரா என்றெல்லாம் பத்திரிகைகளில் விவாதிக்கப்பட்டு வருகிறது.




ஸ்ரீ சுபாஷ் சந்திரர் எங்கே யிருக்கிறார் என்று நமக்குத் தெரியாது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம். அவரை மாறு வேடத்தில் நீண்ட தாடியுடன் ரயிலிலோ டிராமிலோ மோட்டார் பஸ்ஸிலோ நாம் சந்திக்க வில்லை.

ஆனால் அவர் இறந்து விட்டாரா இல்லையா என்பது பற்றி நாம் நிச்சயமாகச் சொல்ல முடியும். நேதாஜி சுபாஷ் இறக்க வில்லை யென்பதுதான் நமது தீர்மானமான அபிப்பிராயம். மரணமே யில்லாத மகா வீரர்களின் கோஷ்டியில் நேதாஜி சேர்ந்து விட்டார். அவருடைய பூத உடம்பு இவ்வுலகில் இருந்தாலும் இல்லா விட்டாலும் என்றும் அழியாத அவருடைய புகழ் உடம்பானது இந்தப் பாரத புண்ணிய பூமியில் இமயமலையும் கங்கை நதியும் உள்ளவரை நிலைத்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

அத்தகைய மரணத்தைக் கடந்த மகா சிரஞ்சீவியின் களை பொருந்திய திருவுருவம் நமது இந்த இதழின் அட்டையைச் சிறப்பாக அலங்கரிக்கிறது.



கல்கி

மலர் 5 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 38

# என்ன சேதி?

## புதிய அவதாரம்

கடைசியில், இந்த ஹிட்லர் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலேயே இருக்கிறார் ்ன்பது வின்ஸ்டன் சர்ச்சிலுக்கும் மேஜர் ஹட்லிக்கும் ரொம்ப அதிசயமா யிருக்கும்.

அதிலும், அவர் சாதாரணமாக யார் ண்ணிலும் படாமல் சந்து பொந்தில் ளிந்து கொண்டிருக்கவில்லை; ஒரு பரிய டொமினியனில் பிரதம மந்திரி ாக இருக்கிறார் என்பதை யறிந்தால் வர்கள் நிச்சயமாக மூர்ச்சை போட்டுக் ழே விழுந்து விடுவார்கள்.

மார்ஷல் ஸ்மட்ஸைத்தான் சொல்லு றோம். சமாதான பக்தரும் உலக ரட்ச ருமான பீல்ட் மார்ஷல் ஸ்மட்ஸையே றிப்பிடுகிறோம்.

ஹிட்லர் இப்போது பீல்ட்மார்ஷல் மட்ஸ் ரூபத்திலே புதிய அவதாரம் டுத்திருக்கிறார். அதன் விளைவாக அவர் ிட்லரைக் காட்டிலும் ஒருபடி மேலே பாயிருக்கிறார்.

ஹிட்லர் ஜெர்மனியில் யூதர்களைக் கான்றார்; அல்லது பத்திரமாக நாடு டத்தி வைத்தார்.

ஆனால், ஸ்மட்ஸோ தென்னாப்பிரிக்கா ல் மனித சமுதாயத்தின் ஒரு பகுதியை தென்னாப்பிரிக்கா செல்வம் கொழிக் ம் பூமியாக விளங்குவதற்கு அரும் பாடு ட்ட மக்களை — இன்று ஆடுமாடுகளைப் பால ஒதுக்கி வைக்கிறார். அவர்கள் தனி டத்தில் வெள்ளையர்களின் கண்ணில் டாமல் வசிக்க வேண்டும் என்று சால்லுகிறார்.

## ாரணம் என்ன?

மார்ஷல் ஸ்மட்ஸ் இந்த மாதிரியாக ழை இந்திய மக்கள்மேல் ஆத்திரங் காண்டு அவர்கள்மீது போர்க்கோலம் னுவதற்குக் காரணம் என்ன?

வெள்ளையர்களாகிய தென்னாப்பிரிக்கர்களுக்குக் கறுப்பர்களாகிய இந்தியர்களைக் காணச் சகிக்கவில்லையாம்!

ஆகையால், அவர்கள் வாழ்வதற்காகவும் வாங்குவதற்காகவும் தனியிடம் ஒதுக்கி வைக்கிறார்களாம்.

ஸ்மட்ஸ் சர்க்கார் கொண்டுவந்திருக்கும் மேற்படி சட்டத்துக்குத் தென்னாப்பிரிக்க நில உரிமைக் கட்டுப்பாடு மசோதா என்று பெயர்.

இந்த மசோதா சென்ற வாரம் மேள தாளத்துடன் தென்னாப்பிரிக்க சட்ட சபையில் நிறைவேறி யிருக்கிறது.

அநியாயத்தையும் அக்கிரமத்தையும் செய்வதற்குக்கூட ஒரு சட்டசபையும் சர்க்காரும் வேண்டும் என்பதற்குத் தென்னாப்பிரிக்கா ஓர் உதாரணம்.

## எதிர்ப்பும் இருக்கிறது!

மேற்படி மசோதாவைத் தென்னாப்பிரிக்க சட்டசபை அங்கத்தினர்கள் எல்லோருமே ஏகமனதாக ஆதரிக்கவில்லையென்பதும் சிலர்—ஏன் 49 பேர்கள் அதைக் கடுமையாக எதிர்த்தார்கள் என்பதும் ஆறுதலளிக்கத் தக்க விஷயம். மசோதாவை எதிர்த்துத் தொழிற்கட்சியைச் சேர்ந்த இரண்டு அங்கத்தினர்கள் ராஜிநாமாகூடச் செய்து விட்டார்கள்!

ஆனால், அவர்கள் எதற்காக இந்த மசோதாவை எதிர்த்தார்கள் என்பதை அறியும்போதுதான் நமக்குத் தூக்கி வாரிப் போடுகிறது.

சர்க்கார் இந்த மசோதாவின் மூலம் தென்னாப்பிரிக்க இந்தியர்களுக்கு ஏராளமான உரிமைகளையும் சுதந்திரத்தையும் வழங்கி விட்டதாக நினைத்து அவர்கள் அஞ்சுகிறார்கள்!

மூன்றாவது மகாயுத்தம் மாத்திரம் அல்ல, முப்பது மகாயுத்தங்களுங்கூட வரும் என்பதற்கு இதைக் காட்டிலும் வேறு என்ன உதாரணம் வேண்டும்?

# நிகழ்ச்சிச் சித்திரம்




இதுவரை யதேச்சையாய்த்
திரிந்த முரட்டு அதிகார வர்க்கக் குதிரையை
அடக்கியாக வேண்டும்.

-உம்மன்

தம்மை ஆதரிக்கும் சுயகாரியப் புலிகளின் உத்தியோகப் பதவிப் போராட்டத்துக்கு ஈடு கொடுத்தாக வேண்டும்.

இதையெல்லாம் அவரால் வெற்றிகரமாகச் செய்து முடிக்க முடியுமா என்று மகா-ஸ்ரீ-ஸ்ரீ ஜோஸியர்வாளைக் கேட்டுப் பார்க்க வேண்டியதுதான்.

## அம்பலத்துக்கு வந்தார்!

தமிழ்நாடு பத்திரிகையாளர் சம்மேளனத்தின் ஐந்தாவது ஆண்டு மகாநாடு சென்ற வாரத்தில் சென்னையில் சிறப்பாக நடைபெற்றது. அதனால் வேறு என்ன பயன் விளைந்தாலும் விளையா விட்டாலும் ஒரு பயன் நிச்சயமாக விளைந்து விட்டது. இத்தனை நாளும் அறைக்குள்ளே இருந்து தென்னிந்திய அரசியல் முதலிய சகல காரியங்களையும் ஆட்டி வைத்துக் கொண்டிருந்த ஒரு சிறந்த எழுத்தாளர் மேற்படி சம்மேளன மகாநாட்டின் மூலம் அம்பலத்துக்கு வந்தார். பத்திரிகை உலகத்தில் திரைக்குப் பின்னால் நடக்கும் காரியங்களை நன்கறிந்தவர்களுக்கெல்லாம் "ஹிந்து" பத்திரிகையின் உதவி ஆசிரியர் ஸ்ரீ ரகுநாதய்யர் அவர்களை நன்றாய்த் தெரியும். "ஹிந்து" தலையங்கக் குறிப்புகளில் ஏதாவது ரொம்ப ரஸமாக இருந்தால், "இது ரகுநாதன் எழுதியது; உடனே தெரிகிறதே!" என்பார்கள் விஷயம் அறிந்தவர்கள். "அது யார் ரகுநாதன்?" என்று கேட்பார்கள் மற்றவர்கள். "ஹிந்து ரகுநாதனைத் தெரியாதா?......" என்று கர்வமாய்ப் பதிலளிப்பார்கள் பத்திரிகை உலகப் பழக்கமுள்ளவர்கள்.

இத்தகைய புகழ் பெற்ற மர்ம மனிதர் ஸ்ரீ ரகுநாதன் அவர்களின் தலைமையில் மேற்படி பத்திரிகையாளர் சம்மேளனத்தின் ஐந்தாவது மகாநாடு நடந்தது.

## அலட்சியத்துக்கு என்ன வேலை?

சென்னையிலிருந்தும் வெளியூர்களிலிருந்தும் ஏராளமான பத்திரிகைக்காரர்கள் மகாநாட்டுக்கு வந்திருந்தார்கள். "ஹிந்துஸ்தான்" ஆசிரியர் ஸ்ரீ ரா. நாராயணய்யங்கார் உபசரணைத் தலைவராயிருந்து எல்லோரையும் வரவேற்றுப் பேசினார். ஸ்ரீ ரகுநாதய்யர் தமது தலைமைப் பிரசங்கத்திலே, இந்தியப் பத்திரிகைகளின் எதிர்காலத்தைப் பற்றியும் அடக்குமுறைச் சட்டங்களை ரத்துச் செய்ய வேண்டியதன் அவசியத்தைப் பற்றியும் சுயராஜ்யம் கிடைத்த பிறகு புதிய கடமைகளை நிறைவேற்றவும் பிரயோஜனமான வேலைகளைச் செய்யவும் இந்தியப் பத்திரிகைகள் தங்களைத் தயார் செய்து கொள்ள வேண்டியது பற்றியும் விரிவாகப் பேசினார். இறுதியாகக் கூறிய முடிவுரையில் மகாநாட்டில் விவாதிக்கப்பட்ட விஷயங்களைச் சம்மேளனம் நன்கு கவனிக்குமென்றும் அதைப் பற்றி அலட்சியமாக இருக்கப் போவதில்லையென்றும் கூறினார்.

ஸ்ரீ ரகுநாதய்யர் இதைச் சொல்லியிருக்கவே வேண்டியதில்லை. அவர் தலைவராக வந்த பிறகு அங்கே அலட்சியத்துக்கு என்ன வேலை? ஸ்ரீ ரகுநாதய்யரின் தலைமையிலே, தமிழ் நாடு பத்திரிகையாளர் சம்மேளனம் புதிய ஊக்கமும் புது பலமும் பெறுமென்று எதிர்பார்க்கிறோம்.

## தமிழ் ஹரிஜன்

நமது ஒப்பற்ற தலைவர் மகாத்மாஜியின் மணி வாசகங்களையும் அரிய கருத்துக்களையும் கொண்ட ஹரிஜன் வாரப் பத்திரிகையின் தமிழ்ப் பதிப்பு வெளிவருவது அறிந்து மகிழ்ச்சி அடைகிறோம்.

நாமக்கல் கவிஞர் ராமலிங்கம் பிள்ளை அவர்களை ஆசிரியராகக் கொண்ட மேற்படி தமிழ் ஹரிஜன் பத்திரிகை தமிழ்ப் பண்ணையிலிருந்து பிரசுரமாகிறது.

இந்த உன்னத வெளியீட்டின் மூலம் தமிழ்ப் பண்ணைக்காரர்கள் தமிழ் நாட்டுக்கும் தமிழ் மக்களுக்கும் சிறந்த பணியாற்றுவார்கள் என்று நம்புகிறோம். அவர்கள் இந்த முயற்சியில் பூரண வெற்றியடையப் பிரார்த்திக்கிறோம்.

# சபாஷ்! புண்ணியவான்களே!

பலே சபாஷ்! புண்ணியவான்களே!

நல்ல போடு போட்டீர்கள்! சக்கையாகப் போடு போடு என்று போட்டு விட்டீர்கள்!

அகலமாக, நீளமாக, உயரமாக, விசாலமாகப் போட்டீர்கள்!

நன்றாகக் குழைத்துத் திவ்யமாகப் போட்டீர்கள்!

நாமக் கட்டியை ஜோராகக் குழைத்து நெற்றியில் பிரம்மாண்டமான * நாமத்தைப் போட்டீர்கள்!

காங்கிரஸின் நெற்றியிலே பட்டையாகப் போட்டீர்கள்!

மஞ்சள் பெட்டியின் நெற்றியிலே வெள்ளையாகப் போட்டீர்கள்!

'ஹை கமாண்டு' என்ற பெத்தப் பெயருடன் விளங்கும் காங்கிரஸ் மாபெருந் தலைவர்களுக்கு நன்றாகப் பாடம் கற்பித்தீர்கள்!

"நீங்கள் என்ன சொல்வது? நாங்கள் என்ன கேட்பது?" என்று சொல்லி அந்தப் பெரிய தலைவர்கள் மூவரையும் தலை குனிய வைத்தீர்கள்!

"காங்கிரஸின் பெயரால் கட்டையை நிறுத்தினாலும் கழுதையை நிறுத்தினாலும் கல்லுக்கு வோட்டுப் போடச் சொன்னாலும் புல்லுக்கு வோட்டுப் போடச் சொன்னாலும் போட்டே தீர வேண்டும்! அதுதான் தேசபக்தி! அதுதான் காங்கிரஸ் அபிமானம்!" என்று சொல்லி எங்களிடம் வோட்டு வாங்கிக் கொண்ட புண்ணியவான்களே!

நீங்கள் இருக்கும் திக்கு நோக்கித் தண்டம் சமர்ப்பிக்கிறோம்.

காந்தி மகானையும் காங்கிரஸ் அக்கிராசனர் ஆஸாதையும் காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு தலைவர் படேலையும் விட நீங்கள் பெரியவர்கள்! பெரிய பெரிய பெரிய பெரிய பெரியவர்கள்!

அதைத் தெரிந்து கொள்ளாமல் உங்களுக்குப் புத்திமதி சொல்லி வந்த அந்த மூன்று பேர்வழிகளுக்கும் நன்றாகப் புத்தி கற்பித்தீர்கள்!

சபாஷ்! புண்ணியவான்களே!

---

* தயவு செய்து வீர சைவர்கள் 'நாமம்' என்று வரும் இடங்களிலெல்லாம் 'திருநீறு' என்று மாற்றிப் படித்துக் கொள்ளவும்.

ஒரு கதை சொல்கிறோம், கேளுங்கள். தமிழ் நாட்டிலே மடாதிபதிகள் நிறைந்த ஒரு பிரதேசத்திலே புத்திசாலி மனிதர் ஒருவர் இருந்தாராம். அவர் மடாதிபதிகளின் மகா சந்நிதானத்துக்குப் போய் அவ்வப்போது தம்முடைய குறைகளை முறையிட்டு அவற்றைத் தீர்த்துக் கொள்ள யாசகம் பெறுவது வழக்கமாம். அவர் கோரிய பொருள் கிடைத்தால், பண்டார சந்நிதிகளைப் பார்த்து "ஆகா! மகா சந்நிதானம்! மகா சந்நிதானம்! இந்த மகா சந்நிதானத்தை வந்து அடுத்தால் அப்புறம் என்ன குறைவு?" என்று பரவசமாகத் துதி பாடிப் புகழ்ந்து கன்னத்தில் போட்டுக் கொள்வாராம். கோரிய காரியம் கைகூடா விட்டாலோ, அதே "மகா சந்நிதானம்" என்ற சொற்றொடரை ஒரு கேள்விக் குறியுடன் சேர்த்து, "மகா சந்நிதானம்? ஹூம்!" என்று கன்னத்தில் அடித்தாற் போல் சொல்லி விட்டுப் போய் விடுவாராம்!

நமது பெரும்பாலான காங்கிரஸ் சட்டசபை அங்கத்தினர்கள் மேற்படி புத்திசாலி மனிதரைத் தோற்க அடித்து விட்டார்கள்!

தேர்தலுக்கு முன்னால் காங்கிரஸ் அபேட்சகர்களாக நியமனம் பெறுவதற்காகவும் மகா ஜனங்களிடம் வோட்டைப் பெறுவதற்காகவும் அவர்கள் காந்தி மகான், மௌலானா ஆஸாது முதலியவர்களைக் குறித்து, "ஆகா! மகா பெரியவர்கள்! மகா பெரியவர்கள்!" என்று பரவசமடைந்து பல்லவி பாடினார்கள்.

தேர்தல் முடிந்து கட்சிக் கூட்டம் கூடியதும், முதல் கூட்டத்திலேயே, கக்கலாம்பரதரம் குட்டிக் கொள்ளும் போதே, மேற்படி தலைவர்களைக் குறித்து, "ஓகோ! மகா பெரியவர்கள்! இவர்கள் என்ன நமக்குப் புத்தி சொல்வது?" என்றார்கள்.

தேர்தலுக்கு முன்னால் "காங்கிரஸ் கட்டுப்பாட்டின் பெருமையே பெருமை! மஞ்சள் பெட்டியின் மகிமையே மகிமை!" என்று கோஷித்தார்கள்.

அதே மனிதர்கள் தேர்தல் முடிந்ததும் காங்கிரஸ் கட்டுப்பாட்டைக் காற்றிலே பறக்க விட்டார்கள்! மஞ்சள்

பெட்டியின் வாயிலேயும் ஒரு பிடி மண்ணை வாரிப் போட்டார்கள்!

* * *

7உ கூடாமல் ஒத்திப் போட்ட காங்கிரஸ் சட்டசபைக் கட்சியின் கூட்டமானது 18உ வியாழக்கிழமை மத்தியானம் 2 மணிக்கு நல்ல ராகு கால வேளையில் சுபகரமாக ஆரம்பமாயிற்று. ஸ்ரீ வி. வி. கிரி அவர்கள் குறைந்த பட்சம் ஐந்து நாளைக்கு அந்த இடத்திலிருந்து எழுந்திருப்பதில்லை யென்ற திடசங்கல்பத்துடன் மலைபோல் அக்கிராசன பீடத்தில் அமர்ந்தார். காங்கிரஸ் மாபெருந் தலைவர்களின் புத்திமதியையும் மௌலானா ஆஸாதின் தந்தியையும் படித்தார். பிறகு கூட்டத்திற்கு வந்திருந்த 188 மணியான காங்கிரஸ் எம். எல். ஏ.. எம். எல். சி-க்களின் அபிப்பிராயத்தைக் கேட்டார். ஸ்ரீ. ஏ. வைத்தியநாதய்யர் போன்ற அப்பாவிகள் சிலர், "காங்கிரஸ் தலைவர்களின் பெயரைச் சொல்லித்தான் நாம் எல்லாரும் இந்த ஸ்தானங்களுக்கு வந்தோம். ஆகையால் தலைவர்கள் சொல்வதைக் கேட்க வேண்டும்" என்றார்கள். மற்றவர்கள் "தலைவர்களா? அவர்கள் யார் தலைவர்கள், நாம் இத்தனை தலைவர்கள் இங்கே இருக்கும் போது? நாமே தலைவர்கள், நாமே ராஜாக்கள், நாமே மந்திரிகள்!" என்றார்கள். கடைசியில், வோட்டு எடுக்கப்பட்டது. காங்கிரஸ் மாபெருந் தலைவர்களின் புத்திமதியை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று 38 அப்பாவிகள் வோட்டுக் கொடுத்தார்கள். "தலைவர்களின் புத்திமதியைத் தள்ளுங்கள் குப்பையிலே!" என்று 148 தீரர்கள் தீர்ப்புக் கொடுத்தார்கள்.

இவ்விதமாகக் காங்கிரஸ் சட்டசபைக் கட்சியின் முதல் நாள் கூட்டம் மஞ்சள் பெட்டிக்கு மகத்தான வெற்றி (???) யுடன் மங்களகரமாக முடிவுபெற்றது!!!

* * *

மேற்படி புண்ணிய தினமாகிய 18உ யிலிருந்து 22உ வரையில் தினந்தோறும் சட்டசபைக் காங்கிரஸ் அங்கத்தினர்கள், பெயர்பெற்ற தியாகராஜ நகரில் புகழ்பெற்ற ஹிந்தி பிரசார சபையின் ரங்கசாமி அய்யங்கார் மண்டபத்தில், கூடுவதும் கலைவதுமா யிருந்தார்கள். தேசம் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தது.

பிரிட்டிஷ் மந்திரிமார்களுடன் மல்லுக் கொடுத்துவிட்டு முஸ்ஸோரிக்கு ஓய்வு பெறச் சென்ற மௌலானா ஆஸாது சென்னைச் செய்தியையறிந்ததும் மிக்க பொறுமை காட்டி மிகுந்த பெருந்தன்மையுடன் மறுபடியும் ஒரு யோசனையைத் தெரிவித்தார். "உங்களுக்குள் அபிப்பிராய பேதம் இருப்பதால் ஒன்றுக்கு மேற்பட்ட பெயர்களைத் தலைமைப் பதவிக்குச் சிபார்சு செய்யலாம். அவர்களில் ஒருவரை நான் நியமனம் செய்கிறேன்!" என்றார்.

இந்த யோசனையை எதற்காக மௌலானா சொன்னார் என்றால், தலைமைப் பதவியை வோட்டுக்கு விட்டால் அதன்மூலம் கட்சிப் பிரதி கட்சிகள் ஸ்திரமாகி விடுமென்றும், ஏகமனதாக ஒரு தலைவரைத் தேர்ந்தெடுத்தால்தான் அந்தத் தலைவருக்குப் போதிய பலம் இருக்கும் என்றும் எண்ணி, அதற்குச் சௌகரியம் செய்து கொடுப்பதற்காகவே 'பேனல்' தேர்ந்தெடுத்து அனுப்பும்படி யோசனை சொன்னார்.

ஆனால் 18உ யன்று தங்கள் பதவி வேட்டைச் சுதந்திரத்தை நிலைநாட்டிய புண்ணியவான்கள் 20உ அதைப் பறி கொடுத்து விடச் சம்மதிப்பார்களா? மறுபடியும், "இவர் யார் தலைவரைப் பொறுக்குவதற்கு?" என்ற கேள்வி எழுந்தது. அதைக் காட்டிலும் முக்கியமாக, "மௌலானா ஆஸாது தலைவரை நியமித்தால் அந்தத் தலைவரை மகா மேன்மை தங்கிய கவர்னர் பெருமான் ஒப்புக் கொள்ள வேண்டுமே? ஒப்புக் கொள்ளாவிடில் என்ன செய்வது?" என்ற சந்தேகத்தையும் சிலர் கிளப்பி விட்டார்கள்.

அப்புறம் கேட்பானேன்? மௌலானா ஆஸாதின் முதல் யோசனைக்கு ஏற்பட்ட கதியே இரண்டாவது யோசனைக்கும் ஏற்பட்டது. ஆனால் இந்தத் தடவை அது வேறு ரூபத்தில் — அதாவது மௌலானாவுக்கு ஸ்ரீ வி. வி. கிரி அனுப்பிய சந்தேகப் பிரச்னைத் தந்தி மூலமாக — ஏற்பட்டது.

மௌலானா பார்த்தார். "விதியைத் தடுக்க யாராலும் முடியாது" என்ற முடிவுக்கு வந்தார். "திவ்யமாக உங்களுடைய சொந்தப் பொறுப்பிலேயே ... போய்ச் சேருங்கள்!" என்று சொல்லிச் சென்னை மாகாண விவகாரங்களிலிருந்து தமது இரண்டு கைகளையும் கழுவிக் கொண்டார்.

* * *

கடைசியாக ஏப்ரல் 22உ யாகிய மகா விசேஷ தினம் வந்து சேர்ந்தது.

பதவி மோகம் கிஞ்சித்து மில்லாத ஸ்ரீ டி. என். முத்துரங்க முதலியார் பதவி மோகம் அறவே இல்லாத பிர

மூகர்களால் கட்சித் தலைவர் பதவிக்குப் பிரேரேபிக்கப்பட்டார். அவ்விதமே ஆந்திர கேசரி ஸ்ரீ டி. பிரகாசத்தின் பெயரும் பிரேரேபிக்கப்பட்டது.



பதவி மோகம் என்பது கொஞ்சமும் இல்லாத அங்கத்தினர்கள் 152 பேர் வோட்டுக் கொடுத்தார்கள். ஸ்ரீ டி. பிரகாசத்துக்கு 82 வோட்டுக்களும் ஸ்ரீ சி. என். முத்துரங்க முதலியாருக்கு 69 வோட்டுக்களும் கிடைத்தன. ஒரு வோட்டு செல்லத்தக்கதல்லவாயிற்று.

ஆகவே மொத்தம் 196 காங்கிரஸ் அங்கத்தினரில் 82 அங்கத்தினரின் வோட்டுகளை (அதாவது அரைவாசிக்கும் குறைவான வோட்டுகளைப்) பெற்று ஆந்திர கேசரி பிரகாசம் அபூர்வமான, அற்புதமான, உலகமே இதுவரைக்கும் கண்டிராத மகத்தான வெற்றியை மகத்தான முறையில் மகத்தாக அடைந்தார்.

ஸ்ரீ சி. என். முத்துரங்க முதலியார் அவர்களோ 69 அருமையான வோட்டுகளைப் பெற்றுத் 'தோல்வி' என்று சொல்லப்படுகிற உண்மையில் பிரமாதமான பிரம்மாண்டமான பிரமிக்கத்தக்க வெற்றியை அடைந்தார்.

தேர்தல் முடிவு வெளியானதும் "ஆந்திர கேசரி பிரகாசத்துக்கு ஜே!" "பதவி மோகமில்லாத முத்துரங்க முதலியாருக்கு ஜே!" "காங்கிரஸ் தலைமை வீழ்க!" "ஆலாதின் யதேச்சாதிகாரம் அடியோடு ஒழிக!" என்னும் கோஷங்கள் வானளாவிக் கிளம்பி நட்சத்திர மண்டலங்களையெல்லாம் கிடு கிடுக்கச் செய்தன.

அப்புறம் சிறிது நேரம் அந்தப் பெயர் பெற்ற அரங்கசாமி அய்யங்கார் மண்டபத்தில் ஆனந்தக் கண்ணீரும் சோகக் கண்ணீரும் கலந்து ஆறாகப் பெருகி ஓடின.

"இந்தத் தோல்வியானது எனக்கு அளித்த ஆனந்தத்தைப் போல் இதற்கு முன் எந்தத் தோல்வியும் அளித்தது கிடையாது" என்று ஸ்ரீ சி. என். முத்துரங்க முதலியார் சொன்னார்.

அவரை ஆதரித்த கேரளத் தலைவர் ஸ்ரீ மாதவமேனன் கண்ணீரும் கம்பலையுமாய், "ஆகா! முத்துரங்க முதலியாரை ஆதரிக்கும்படியான துர்ப்பாக்கியம் எனக்கு வந்ததே! அதனால் எனக்கு ஏற்பட்ட துன்பத்தை என்னவென்று சொல்வேன்? அந்தத் துன்பமானது இப்போது ஸ்ரீ பிரகாசம்காரு அடைந்த மாபெரும் மகத்தான வெற்றியினால் அல்லவா தீர்ந்தது? இனி மேல் எனக்கு என்ன குறை? ஆந்திரகேசரியின் அந்தரங்க அபிமானம் கொண்டவனாய் நான் சென்ற இருபத்தைந்து வருட காலமாக அவரிடம் அளவில்லாத பக்தி பூண்டு அரும் பெரும் தொண்டு செய்து வந்திருப்பதை அவர் மறக்க மாட்டார் என்று நம்புகிறேன். முக்கியமாக, மந்திரி சபை அமைக்கும் போது அதை மறக்க மாட்டார் என்று நம்புகிறேன்!" என்றார்.

இந்தவிதமான வாழ்த்துரைகளுடன் கூட்டம் அன்று இனிது முடிந்தது.

* * *

கட்சித் தலைமைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஸ்ரீ டி. பிரகாசம் காருவை மேன்மை தங்கிய கவர்னர் அழைத்து விட்டார்! அவரும் போய்ப் பார்த்து 29உக்குள் மந்திரிகளின் பெயர் ஜாபிதா தருவதாகச் சொல்லி விட்டார்.

மந்திரி சபை அமைப்பைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. அதைப் பற்றி ஸ்ரீ பிரகாசம் காரு கவலைப்பட வேண்டும். அவருக்குச் சாதகமாக வோட்டு அளித்தவர்களும் விரோதமாக வோட்டு அளித்தவர்களும் கவலைப்பட வேண்டும். இந்த இரு சாராரும் ஸ்ரீ பிரகாசம் அவர்களின் கிருஹத்தைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறபடியால், மந்திரி சபை அமைப்பு ஒரு மாதிரி குறிப்பிட்ட தேதிக்குள் முடிந்து விடுமென்று எதிர்பார்க்கிறோம். 93 ஏ பிரிவு ஆட்சியை நீடிக்கச் செய்த தனிக் கௌரவம் சென்னை மாகாணத்துக்கு ஏற்பட்டு விடாதென்றும் நம்புகிறோம்.

* * *

அட்வைஸரி கவர்ன்மெண்டின் ஆட்சி இம் மாகாணத்தில் இன்னமும் நீடிக்குமோ என்ற கவலை நீங்கிக் காங்

கிரஸ் மந்திரிசபை ஏற்படுவது திருப்திகரமான விஷயந்தான்.

ஆனால் அத்தோடு நமது கவலை எல்லாம் தீர்ந்து போனதாகாது.

புது மந்திரி சபையும் பொது ஜனங்களும் கவலையோடு கவனிப்பதற்கு இன்னும் பல முக்கிய விஷயங்கள் இருக்கின்றன.

அவற்றில் மிகவும் முக்கியமானது நாட்டில் ஏற்பட்டிருக்கும் உணவுப் பொருள் பஞ்சந்தான்.

சட்டசபைக் கட்சிக் கூட்டத்தில் ஒரு விரத் தியாகியான அங்கத்தினர் ''பஞ்சத்தினால் ஒரு மனிதன் செத்துப் போவதற்கு முன்னால் நாங்கள் 196 பேரும் செத்துப் போகத் தயார்!'' என்று கூறினாராம்.

அத்தகைய துர்க்கதியை அவர்கள் அடைவதினால் யாருக்கும் எவ்விதத் திருப்தியும் ஏற்படாது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பஞ்சத்தினால் ஏற்படும் கஷ்டம் செத்துப் போவது மட்டும் அல்ல என்பதையும் அவர்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறோம்.

ஒரு மனிதன் உணவே யில்லாமல் தண்ணீரை மட்டும் குடித்துக் கொண்டு 60 நாள் வரையில் உயிரோடிருக்கலாம்.

அரை வயிறு அல்லது கால் வயிறு சாப்பிட்டுக் கொண்டு இரண்டு வருஷம் ஜீவித்திருக்கலாம்.

ஆனால், அவ்வளவு நாள் அரை வயிற்றுச் சாப்பாட்டுடன் இருப்பவன் அப்புறம் நடைபிணமாகத்தான் இருப்பான். உழைப்புக்கும் தொழிலுக்கும் அவன் தகுதியற்றவனாகி விடுவான்.

ஆகையால் ஜனங்கள் உணவில்லாமல் செத்துப் போனால்தான் பஞ்சம் என்பதல்ல; ஜனங்கள் அரை வயிறு உண்டு அவதிப்படுவதற்கும் பஞ்சம் என்றுதான் பெயர்.

அத்தகைய பஞ்சம் இனிமேல் எப்போதோ வரப்போகிறது என்று நமது சட்ட சபை அங்கத்தினரான புண்ணியவான்கள் எண்ணிக்கொண்டிருந்தார்களானால் அது பெருந் தவறாகும்.

பஞ்சம் ஏற்கெனவே வந்து விட்டது.

ஹோட்டல்களில் ஒரு படி அரிசியைக் கொண்டு 14 பேருக்குச் சோறு போட வேண்டுமென்றால், இந்த நிலைமையைப் பஞ்சம் என்று சொல்லாமல் வேறு என்னவென்று சொல்வது?

எதிர்பார்த்தபடி வெளி நாடுகளிலிருந்து அரிசி வராவிட்டால், பஞ்சம் இன்னும் கடுமையாகலாம்.

அதுவும் இந்த வருஷத்தோடு போகிற காரியம் அல்ல. பஞ்சம் அடுத்த வருஷம் வரலாம்; அதற்கு அடுத்த வருஷமும் வரலாம்.

இந்த மாகாணத்து மக்களுக்கு வேண்டிய உணவுப் பொருள் முழுதும் இம் மாகாணத்தில் உற்பத்தி யாகவில்லை. வெளி மாகாணங்களையும் வெளி நாடுகளையும் சென்னை மாகாணம் எதிர்பார்க்கவேண்டி யிருக்கிறது.

இந்த நிலைமை உள்ள வரையில் பஞ்ச பயம் எப்போதும் இருந்து கொண்டுதா னிருக்கும்.

எனவே, முதலில் கவனித்துச் செய்ய வேண்டிய காரியம், இம் மாகாணத்தின் விவசாயத்தைப் பெருக்கிப் பஞ்ச பயம் இல்லாமல் செய்தல்.

அடுத்த படியாக, முக்கிய காங்கிரஸ் திட்டங்களாகிய மதுவிலக்கு, ஆலயத் திறப்பு, கல்விமுறைச் சீர்திருத்தம், குதிரைப் பந்தயம் முதலிய சூதாட்டங்களை ஒழித்தல் ஆகிய காரியங்களை நிறைவேற்ற வேண்டும்.

நமது புதிய பிரதம மந்திரி கொஞ்சம் ஞாபகமறதி யுள்ளவர் என்பது பிரசித்தமான விஷயம். இதைப் பயன்படுத்திக் கொண்டு மற்ற மந்திரிமார்களும் சட்ட சபை அங்கத்தினர்களும் திட்டங்களை மாற்றி விடக் கூடாது. அதாவது ''ஆலயங்களை அடியோடு மூடி விடுகிறோம்; கள்ளுக்கடைகளைச் சகல ஜனங்களுக்கும் திறந்து வைக்கிறோம்'' என்று சொல்லிவிடக் கூடாது.

ஆலயங்களைத்தான் சகல ஜனங்களுக்கும் திறந்துவிட வேண்டும்; கள்ளு சாராயக் கடைகளைத்தான் அடியோடு மூட வேண்டும்.

மற்றக் கட்சிப் பிரதி கட்சி வாதங்களையெல்லாம் மறந்து விட்டு மேற் சொன்னவை போன்ற முக்கியமான காரியங்களில் சகலரும் கவனம் செலுத்துமாறு கேட்டுக் கொள்கிறோம்.

காங்கிரஸ் மாபெருந் தலைவர்கள் தீர்க்காலோசனை செய்து கூறிய புத்திமதியைப் புறக்கணித்துத் தலைமைப் பதவிக்கு வந்திருக்கும் ஸ்ரீ டி. பிரகாசம் மிகப் பெரிய பொறுப்பை ஏற்றுக் கொண்டவராகிறார். அந்தப் பொறுப்பைத் தம்மால் நிர்வகிக்க முடியும் என்பதைப் பிரதம மந்திரி பிரகாசம் நிரூபித்துப் பெயரும் புகழும் பெறுவாராக. கடவுளே துணை.

---

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: ரா. சுப்ரமணியம், 28, நேஷனல் காலேஜ் ஹாஸ்டல், தெப்பக்குளம் போஸ்டு, திருச்சி.

# மகத்தான நஷ்டம்

மகா புத்திமானும் மகத்தான கல்விமானும் மிகச் சிறந்த கனவானும் நிகரற்ற வாசாலகப் பிரசங்கியுமான மகாகனம் சாஸ்திரியார் சென்ற வாரத்தில் நம்மை விட்டுப் பிரிந்து சென்றார். மகா மகோபாத்தியாய சாமிநாதய்யர் அவர்களின் மரணத்துக்குப் பிறகு தமிழகம் இத்தகைய மகத்தான நஷ்டத்தை அடைந்ததில்லை.

பனிச்சென்று வெய்யில் எரிக்கும்போது மழைத் தூற்றல் போட்டால் வானமுகட்டில் வான வில் உண்டாகிறது. அந்த வான வில்லைப் பார்த்து ரஸிகர்கள் பரவசமடைகிறார்கள். "வான வில்லினால் என்ன பிரயோஜனம்?" என்று கேட்பதில்லை. வான வில்லின் பிரயோஜனம் வான வில்லேதான். அதனால் பூமியும் வானமும் கற்பனைக் கெட்டாத அழகு பெற்று விளங்குகிறது.

அம்மாதிரியே மகாகனம் சாஸ்திரியார் போன்ற பண்பட்ட கனவான்களைக் குறித்து, உலகத்துக்கோ தேசத்துக்கோ அவர்களால் ஏற்பட்ட பிரயோஜனம் என்ன என்று ஆராய்ச்சி செய்ய வேண்டியதில்லை.

சாஸ்திரியார் போன்றவர்கள் ஒரு நாட்டில் வாழ்ந்திருந்தால் அதுவே அந்நாடு அடையும் பெரும் பிரயோஜனமாகும். அவர்கள் பொது ஊழியம் என்று ஒன்றும் செய்யாமல் சும்மா இருந்தாலும், அவர்களுடைய பண்பாட்டில் சிறந்த வாழ்க்கையே நாட்டுக்கு அளவற்ற நன்மையைத் தரக் கூடியது. அவர்களுடைய பண்பட்ட வாழ்க்கையினால் அவர்கள் வசிக்கும் நாட்டு மக்கள் எல்லாருடைய வாழ்க்கையும் அழகு பெறுகிறது; மேன்மை பெறுகிறது; ஒளி பெறுகிறது.

அத்தகைய பண்பாட்டில் சிறந்த பெரியார் தியாக வாழ்க்கையை மேற்கொண்டு பொது ஜன சேவையையும் மேற்கொள்வாரானால், அவரால் தேசம் அடையும் நன்மையை யாரால் அளவிட முடியும்?



பொதுஜன சேவைக்கே தமது வாழ்க்கையை அர்ப்பணம் செய்வது என்ற திடமான சங்கற்பத்துடன் தியாக நெறியைக் கடைப்பிடித்த உத்தமர்களிலே சாஸ்திரியார் தலைசிறந்த ஒருவர். காலஞ்சென்ற மகான் கோகலேயின் நம்பிக்கைக்குப் பாத்திரமான உத்தம சீடர். மகாத்மா காந்தியின் அந்தியந்த நண்பர். சமீபத்தில் மகாத்மா காந்தி சென்னைக்கு வந்திருந்த போது ஆஸ்பத்திரிக்கும் வீட்டுக்கும் சென்று சாஸ்திரியாரை மூன்று தடவை பார்த்தார் என்பது நேயர்களுக்கு நினைவிருக்கலாம்.

அரசியல் துறையில் மகாத்மா காந்தியைப் பல முறை சாஸ்திரியார் எதிர்த்திருக்கிறார். கடுமையான வார்த்தைகளில் கண்டனமும் செய்திருக்கிறார். ஆனபோதிலும் அவரிடம் மகாத்மா இவ்வளவு நட்புரிமை பாராட்டியது சாஸ்திரியாரின் குணப் பெருமைக்கு ஒப்பற்ற அத்தாட்சியாகும்.

அத்தகைய உத்தம புருஷரைத் தமிழ் நாடு இழந்துவிட்டது. ஆனாலும், ஒரு திருப்தி இருக்கிறது. அது, சாஸ்திரியார் மீண்டும் செந்தமிழ் நாட்டில் வந்து பிறப்பார் என்னும் திருப்திதான்.

மகாகனம் சாஸ்திரியார் ஆங்கில பாஷையில் அடைந்திருந்த ஒப்பற்ற நிபுணத்வம் அனைவரும் அறிந்ததே. மகாத்மா காந்தி ஆங்கில ஹரிஜன் பத்திரிகையை ஆரம்பித்து முதல் இதழைச் சாஸ்திரியாருக்கு அனுப்பிய போது, அந்த இதழில் 27 தவறுகளைக் கண்டு பிடித்துச் சாஸ்திரியார் மகாத்மாவுக்குத் தெரிவித்திருந்தார்!

சாஸ்திரியாரின் மேஜைமீது சதா சர்வ காலமும் பெரிய வெப்ஸ்டர் அகராதி அலங்காரமாய் விளங்கி வந்தது என்பதும் பலருக்குத் தெரிந்திருந்தது.

ஆனால் அந்த வெப்ஸ்டர் அகராதி தன் சிம்மாசனத்திலிருந்து இறங்கும் காலமும் சில வருஷத்துக்கு முன் வந்தது.

ஆசிரியர் எஸ். வி. வி. அவர்களைக் கௌரவிப்பதற்காகச் சென்னையில் கூடிய மாபெரும் கூட்டத்தில் இங்கிலீஷில் பேசிக்கொண்டு வந்த சாஸ்திரியார் திடீரென்று தமிழில் — 'கொச்சை'த்

தமிழில் — பேசுவதற்கு ஆரம்பித்துச் சபையோரைக் கதிகலங்க அடித்தார்!

அன்று முதல் கொஞ்சம் கொஞ்சமாக சாஸ்திரியாரின் தாய் பாஷை அபிமானம் வளர்ந்து வந்தது.

அன்னிய ஆங்கில பாஷையைக் கற்பதிலும் அதில் புலமை பெறுவதிலும் தாம் எடுத்துக்கொண்ட பிரயத்தனத்தைத் தாய் மொழியான தமிழ் பாஷை விஷயத்தில் எடுத்துக் கொள்ளாமல் போனேமே என்ற குறை நாளுக்கு நாள் அவர் மனதில் வளர்ந்தது.

தமிழில் எழுதவும் பேசவும் அவ்வப்போது அவர் பிரயத்தனம் செய்து வந்தார்.

அந்த உத்தம புருஷரின் அந்திய காலத்து ஆசை நிறைவேறாமற் போனது என்பது சர்வ நிச்சயம். அது நிறைவேறுவதற்கு அப்பெரியார் மீண்டும் சுதந்திரத் தமிழகத்தில் பிறந்துதானே ஆக வேண்டும்?

# வான சஞ்சாரம்

இசைத்தேனீ

திருச்சியில் 15உ. நடந்த சாத்தூர் ஏ. ஜி. சுப்ரமணியம் கச்சேரி வெகு சிறப்பா யிருந்தது. நய சாரீரத்தில் எல்லாவற்றையும் நிதானமாயும் தெளிவாயும் பாடினார். சங்கராபரணமும், பல்லவி ராகமாகக் கல்யாணியும் விஸ்தாரமாயும் படிப்படியான சஞ்சார அழகுடனும் மனம் கவர்ந்தன. கீரவாணி, வசந்தா, பைரவி, காபி ராகங்களும் வனப்பா யிருந்தன.

12உ. திருச்சியில் நடந்த கல்லிடைக் குறிச்சி என். ஹரிஹர அய்யரின் கச்சேரி, சென்ற வாரத்திய முதன்மை நிகழ்ச்சிகளில் ஒன்று. கல்யாணி விஸ்தாரமாயும் கற்பனை நிறைந்தும் இருந்தது. ஆபோகி, நாட்டக் குறிஞ்சி ராகங்களும் அழகான வளைவு குழைவுகளுடன் முதல் ஸ்தானத்துக்குப் போட்டியிட்டன. ஸ்வரப்ரஸ்தாரங்கள் விறுவிறுப்பா யிருந்தன.

11உ. கேட்ட சிதம்பரம் சி. கோமதியின் கானம், திருச்சி நிலையத்துக்கு வாய்த்த மூன்றாவது உயர்தரக் கச்சேரி. சாரீரமும், இனிமையும், சஞ்சாரமும் கொண்ட ஞானம் படைத்தவர். பிர்க்காப் பொழிவில் தெளிவும், ராகங்களில் மணங்கமழும் வழியும் குறிப்பிடத்தக்கவை. பஹுதாரி, காம்போதி ராகங்கள் வனப்பு வடிவங்களா யிருந்தன.

சாரீர சம்பத்தில்லாவிடினும், அசாத்ய சாதகமும், அமோக கற்பனையும், அபூர்வ வழியும் கொண்டு, கேட்போரைப் பிரமிக்க வைப்பவர் கோபு என்னும் மருத்துவக்குடி ராஜகோபாலய்யர். 14உ. சென்னையில் அவருக்குக் கிடைத்தது குறுகிய அரைமணி நேரமேயாயினும், அதற்குள் அவரது ஞானச் சிறப்பை நன்கு விளக்கினார். அன்றைய காம்போதி ராகம் ஒன்றையே அதற்கு அத்தாக்ஷியாகச் சொன்னால் போதும். அதில் விழுந்த கற்பனைச் சஞ்சாரங்களின் அழகும் பாவப் பொழிவும் குறிப்பிடத் தக்கவை

திருச்சியில் 9உ. டி. சுப்ரமணிய தேசிகர் நய சாரீரத்தில், போக வசந்தம் என்ற நேர் புதிய ராகத்தைப் பாடியது கவனத்தை ஈர்த்தது. உருப்படிகளில் ஸ்வரங்களை அசைத்துப் பிடித்ததில் ஒரு தனி அழகு கண்டது.

10உ. சென்னையில், எம். எஸ். ஞானமணியின் பாட்டு பலவிதங்களில் சற்று வித்தியாசமா யிருந்தது. பிரமிக்கத்தக்க ஸ்வர சஞ்சாரங்கள் கொண்டு, பி. எஸ். ராஜுவய்யங்காருக்குத் தான் சளைத்தவரில்லை என்று காட்டுவது போல், தாரநிஷாதம் வரை அலக்ஷியமாய் விட்டுப் பாடினார். அவர் பாடிய ராகங்களெல்லாம் அபூர்வமாகவே யிருந்தன. பூர்ண ஷட்ஜம் என்ற ராகம், ஸ்தூலமாய்க் கவனிக்கும்போது சிறிது ஹிந்துஸ்தானி கலந்த ஆபேரி சாயையா யிருந்தது.

12உ. திருச்சியில் பாடிய டி. கே. நாராயணனுக்கு நய சாரீரம். 'குவலயாபரணம்' என்ற அபூர்வ ராகத்தைத் திறம்படக் கையாண்டது மெச்சத்தக்கது.

13உ. சென்னையில் காலையில் டி. கே. பட்டம்மாள், இரவு தண்டபாணி தேசிகர், திருச்சியில் காலையில் (நாதஸ்வரம்) நடராஜசுந்தரம் பிள்ளை, மாலையில் மதுரை மணி அய்யர் இவர்களின் பெரிய சிறப்பான கச்சேரிகளோடு தமிழ்ப் புது வருஷம் கோலாகலமாய்ப் பிறந்தது.

15உ. சென்னையில், எம். எஸ். நடராஜய்யரின் சங்கராபரணமும் 'வல்லகாதன' உருப்படியில் நிரவல் ஸ்வரங்களும் சிறப்பா யிருந்தன.

அன்று அதே நிலையத்தில் கேட்ட இ. வி. ராமச்சந்திரனின் கச்சேரி உயர்ந்த ரகமா யிருந்தது. அரிய ஞானமும் அசாத்ய சாதகமும் கொண்டு ராகங்களையும் உருப்படிகளையும் அநாயாசமாய்க் கையாண்டார்.

மதிப்பு வாய்ந்த சீனியர் வித்வான்களில் சாத்தூர் கிருஷ்ணய்யங்கார் ஒருவர். சிறந்த ஞானமும், பழுத்த அநுபவமும், நல்ல வழியும் கொண்டு சம்பிரதாய முறையில் பாடுபவர். 22உ. திருச்சியில் நடந்த அவர் கச்சேரியில் சாரீரம் இடக்குப் பண்ணாது சௌகரியமா யிருந்தது. ஆரபி, சரஸ்வதி, மணிரங்கு ராகங்களில் சரஸ்வதி வசீகரமா யிருந்தது. 'அநுராகமுலே' 'நீலகண்ட' நெறிகளில் நிரவல் ஸ்வரங்கள், அவரது ஞானச் சிறப்பை நன்கு வெளிப்படுத்தின.

18உ. சென்னையில் ருக்மிணி ராஜகோபாலனின் கானம் எதிர்பார்த்தபடி முதல் தரமா யிருந்தது. பல உயரிய லக்ஷணப் பொருத்தங்களுடன் பண்டிதர்களையும் பாமரரையும் ரஸிக்க வைக்கும் திறமை கொண்டவர். நிதானம், பொருந்திய பிர்க்கா, கமகம், சங்கதி சஞ்சாரங்களில் தெளிவு, இவை கொண்டு ராகங்களையும் உருப்படிகளையும் பாவப் பொழிவுடன் பாடினார்.

கடந்த இரண்டு மாதங்களில் சென்னையில் அடிக்கடி கச்சேரி செய்யச் சந்தர்ப்பங்கள் கிடைத்தது சித்தூர் சுப்ரமணிய பிள்ளைக்கே. 20உ. கேட்ட அவரது முழுக் கச்சேரியில் சாரீரம் உதவியா யிருந்தது. பல ராகங்களையும் கச்சிதமாய்க் கையாண்டார். ராகம், தானம், பல்லவிக்காக எடுத்துக் கொண்ட சங்கராபரணம் தரமா யிருந்தது.

21உ. சென்னையில் பிற்பகலில் ஒரு மணி நேரம் பாடிய எம். டி. பார்த்தசாரதி எடுத்தவுடன் ஸ்வரூபம் நன்கு விளங்கும்படி ராகங்களை பாவத்துடன் வழங்கினார். பைரவி வெகு சிறப்பாயிருந்தது. பூர்ண சந்திரிகா, சௌராஷ்டிரம், காபிராகங்களும் அழகாயிருந்தன.

# ஆபத்பாந்தவன்!




*[காலரா ஹோட்டலின் கண்ணாடியில்லாத அலமாரியின் மேல் தட்டில் உப்புமா, மெதுவடை, பூரி முதலியவை சக்கன் புடை சூழக் காட்சியளிக்கின்றன. இட்டிலி, தோசை, பொங்கல் மூன்றும் அவற்றின் முன்னால் நின்று விம்மி விம்மி அழுகின்றன.]*

உப்புமா :—என்ன, இது? ஒரு நாளும் இல்லாத திருநாளா யிருக்கிறதே? ஏன் இப்படி அழுகிறீர்கள்?

இட்டிலி :—ஊரெல்லாம் சிரிப்பாய்ச் சிரிக்கிறதே, உங்களுக்கு விஷயம் தெரியாதா?

வடை :— தெரியாமல்தானே கேட்கிறோம்?

தோசை :—என்னமோ இத்தனை நாளும் உங்களுடன் சேர்ந்து வாழ்ந்து வந்தோம். இப்பொழுது பிரியும் காலம் வந்துவிட்டது......

பூரி :—எதற்காகவாம்?

பொங்கல் :—எல்லாம் பஞ்சம் செய்யும் வேலைதான்! அது எங்கள் தலையிலும் கைவைக்குமென்று நாங்கள் கனவிலும் கருதவில்லை!

உப்புமா :—பஞ்சமா?

இட்டிலி :— ஆமாம்; நகரில் இப்பொழுது அரிசிப் பஞ்சம் வந்து விட்டதாம். அதற்காக நாங்களெல்லாம் பிராணத் தியாகம் செய்ய வேண்டுமாம். இனிமேல் எந்த ஹோட்டல்காரரும் அரிசியைக் கொண்டு எந்த விதமான பட்சணமும் தயாரிக்கக் கூடாதாம்!

வடை :—அப்படியானால் இட்டிலி பக்தர்கள், தோசை அன்பர்கள், பொங்கல் பிரியர்கள் எல்லாம் என்ன கதியை அடைவதாம்?

தோசை :—அவர்கள் எக்கேடாவது கெட்டுப் போகட்டும்; முதலில் எங்கள் கதியைப் பற்றிச் சொல்லுங்கள்!

பூரி :— அதைப் பற்றி நினைக்கும் போதுதான் எங்களுக்கும் அழுகை, அழுகையாக வருகிறது...ஊ...ஊம்......

*[இப்படி எல்லாம் சேர்ந்து ஒரே அழுகையாய் அழ ஆரம்பித்து விடுகின்றன. அப்பொழுது யாரோ அவற்றுக்கு அருகே நின்று கொண்டு 'இடி, இடி' யென்று சிரிக்கும் சத்தம் கேட்கிறது. சிரித்தவர் வேறு யாருமில்லை; ஸ்ரீமான் கள்ள மார்க்கெட் அவர்கள் தான்!]*

இட்டிலி, தோசை, பொங்கல் மூன்றும் (கை கூப்பி) :—ஆபத்பாந்தவா! அனாத ரக்ஷகா! எங்கும் நிறைந்த எம் பெருமானே! எல்லாம் வல்ல கலியுகக் கடவுளே! அணுவுக்குள்ளும் அணுவாயிருக்கும் ஆண்டவனே! வியாபாரிகளின் அடங்காத ஆசையைக் கொள்ளை லாபத்தைக் கொண்டு பூர்த்தி செய்து, கட்டுப்பாட்டு அதிகாரிகளின் வயிற்றை மேல் வரும்படி கொண்டு நிரப்பி, 'இல்லை, இல்லை' என்று ஏங்கும் பொது மக்களின் ஏக்கத்தையும் ஒருவாறு விலக்கி, சர்க்கார் வரும்படியையும் ஓரளவு உயர்த்தும் உத்தமா! எங்களை மன்னியுங்கள்! ஒரு நிமிஷம் தங்களை மறந்து நாங்கள் அனுபவித்த துன்பம் கொஞ்சநஞ்ச மல்ல; இனி ஒரு கணமும் தங்களை மறக்க மாட்டோம். எங்களுக்குச் சோதனை காலம் வந்து விட்டது. இந்தச் சமயத்தில் தாங்கள்தான் தயவு செய்து எங்களைக் காப்பாற்ற வேண்டும்.

கள்ள மார்க்கெட் :— அஞ்ச வேண்டாம்; அடைக்கலம் தருவோம். ஆனால், ஒரே ஒரு கஷ்டம் மட்டும் இருக்கத்தான் இருக்கும். அதாவது, நீங்கள் அனைவரும் இனி சேர்ந்து வாழ முடியாது. கொஞ்ச நாள் உங்கள் சகாக்களைப் பிரிந்து அஞ்ஞாத வாசம் செய்ய வேண்டி வரும்; சர்க்கார் அதிகாரிகளின் கண்ணில் படாமல் ஒளிந்து வாழவேண்டி வரும். அதனால் பாதகமில்லை; உங்கள் மதிப்பு முன்னைவிட உயரும்; பேரும் புகழும் பெருகும். அதற்காக நாம் உங்களுக்குப் பக்கத் துணையா யிருப்போம்.

*[அவ்வளவுதான்: எல்லாம் சேர்ந்து ஸ்ரீமான் கறுப்பு மார்க்கெட் அவர்களைச் சுற்றிக் கல கல வென்று சிரித்துக் கொண்டே வலம் வந்து பாடுகின்றன :]*

கருப்பு வந்தால் நமக்கென்ன? — என்ன
கண்ட்ரோல் போட்டால் நமக்கென்ன?

கறுப்பு மார்க்கெட் இருக்கின்றார்! — நம்
கவலையைப் போக்கக் காத்திடுவார்!

# சிவகாமியின் சபதம்

கல்கி

## அத்தியாயம் 36

## காபாலிகையின் காதல்

வானை நோக்கிக் கைகள் தூக்கிப் பல தெய்வங்களின் பேரில் ஆணையிட்டுச் சபதம் செய்த பிக்ஷு மறுபடியும் கீழே உட்கார்ந்து புலிகேசியின் உயிரற்ற உடலை எடுத்துத் தம் மடியின் மீது வைத்துக் கொண்டார்.

"தம்பி! நீ சாகவில்லை. இத்தனை நாளும் நாம் ஒருயிரும் இரண்டு உடலுமாக வாழ்ந்து வந்தோம். இப்போது உயிரைப் போல் உடம்பும் ஒன்றாகி விட்டோம். என் உயிரோடு உன் உயிர் ஒன்றாய்க் கலந்து விட்டது. இனிமேல் நீதான் நான்; நான்தான் நீ! இரண்டு பேர் இல்லை!"

இவ்விதம் உருகிக் கனிந்த குரலில் கூறிவிட்டுப் புத்த பிக்ஷு தமது தேகம் முழுவதும் குலுங்கும்படியாக விம்மி விம்மி அழுதார்.

சுயப் பிரக்ஞையை அறவே இழந்து சோகக் கடலின் அடியிலே அவர் ஆழ்ந்து விட்டார் என்று தோன்றியது.

இரவு விரைவாகச் சென்று கொண்டிருந்தது. சந்திரன் மேலே மேலே வந்து கொண்டிருந்தது.

பாறைகள் — மரங்களின் நிழல்கள் குட்டையாகிக் கொண்டு வந்தன.

நெடுநேரம் பாறை மறைவில் நின்று காத்துக் கொண்டிருந்த காபாலிகை கடைசியில் பொறுமை இழந்தாள்.

மெதுவாகப் பாறை மறைவிலிருந்து வெளிப்பட்டு மெள்ள மெள்ள அடிமேல் அடிவைத்து நடந்து வந்தாள்.

பிக்ஷுவின் பின்புறத்தில் வந்து நின்று அவருடைய தோள்களை இலேசாக விரல்களால் தொட்டாள்.

புத்தபிக்ஷு திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார்.

"ரஞ்சனி! நீதானா?" என்றார்.

"ஆம்; நான்தான்!"

"இன்னும் நீ போகவில்லையா?"

"போகச் சொல்லி ஆக்ஞாபித்தால் இதோ உடனே போய் விடுகிறேன்."

"வேண்டாம், இரு! இந்தப் பரந்த உலகில் என்பேரில் அன்பு உடையவள் நீ ஒருத்திதான் இருக்கிறாய்."

"என்பேரில் அன்பு கொண்டவர் ஒருவருமே இல்லை."

"ஆ! ரஞ்சனி! ஏன் அப்படிச் சொல்கிறாய்? நான் ஒருவன் இல்லையா?" என்றார் பிக்ஷு.

சற்றுமுன் அவருடைய குரலில் தொனித்த சோகம் எங்கேயோ போய் இப்போது அதில் கபடங்கலந்த நயச்சிய பாவம் தொனித்தது.

"அடிகளே! ஏன் இந்தப் பேதையை ஏமாற்றப் பார்க்கிறீர்? இந்தக் கோர அவலட்சண உருவத்தின் பேரில் யாருக்குத்தான் பிரியம் ஏற்படும்?" என்று காபாலிகை சந்தேகம் தொனித்த குரலில் கேட்டாள்.

"காதலுக்குக் கண்ணில்லை என்று நீ கேட்டதில்லையா? நீ எத்தனை குரூபியாயிருந்தாலும் என் கண்ணுக்கு நீதான் ரதி!" என்றார் பிக்ஷு.

"வஞ்சக பிக்ஷுவே! ஏன் இப்படி மனமறிந்து பொய் சொல்கிறீர்? என்னை இந்த அலங்கோலம் ஆக்கியது நீர்தானே? என்பேரில் அன்பு இருந்தால் இப்படிச் செய்திருப்பீரா?" என்றாள் காபாலிகை.

"ரஞ்சனி! இதைப் பற்றி எத்தனை தடவை உனக்குச் சொல்லி விட்டேன்? அஜந்தா சித்திரத்தைப் போன்ற அற்புத அழகோடு வாதாபி அரண்மனையில் நீ இருந்தால், யாராவது ஒரு இராஜ குமாரன் உன்னை அபகரித்துக் கொண்டு போய் விடுவான் என்றுதானே இப்படிச் செய்தேன்?"

"என்னைத் தாங்களே அபகரித்துக்கொண்டு போயிருக்கலாமே? யார் வேண்டாம் என்று சொன்னது?"

"அதையும்தான் உனக்கு ஆயிரம் தடவை சொல்லியிருக்கிறேன். மறுபடியும் சொல்கிறேன். நான் செய்ய

வேண்டிய காரியங்கள் சில இருந்தன. முக்கியமாக, புத்த சங்கத்திலிருந்து விடுதலை பெறவேண்டியிருந்தது."

"இப்படித்தான் எத்தனையோ காலமாய்ச் சொல்லிவருகிறீர். எப்போது தான் உமக்கு விடுதலை கிடைக்கப் போகிறது?"

"ரஞ்சனி! எனக்கு விடுதலை கிடைத்து விட்டது! உன் மனோரதம் நிறைவேறுவதற்கான பெருந்தடை நீங்கி விட்டது. உனக்குச் சந்தோஷந்தானே?"

"சத்தியமாகச் சொல்கிறீரா?"

"முக்காலும் சத்தியமாகச் சொல்கிறேன். நான் விடுதலை கேட்கவே தேவை ஏற்படவில்லை. புத்த சங்கத்தாரே என்னைப் பிரஷ்டம் செய்து விட்டார்கள். உன்னுடைய தபஸின் சக்தியினால்தான் இது நடந்திருக்க வேண்டும்."

காபாலிகை இன்னமும் சந்தேகம் நீங்காதவளாய், "ஏன் பிரஷ்டம் செய்தார்கள்? சர்வ சக்தி வாய்ந்த நாகநந்தி பிக்ஷுவைப் புத்த சங்கத்தார் எப்படி பிரஷ்டம் செய்யத் துணிந்தார்கள்?" என்று கேட்டாள்.

"அது பெரிய கதை. அப்புறம் சொல்கிறேன். ரொம்ப முக்கியமான வேலை இப்போது நமக்கு இருக்கிறது. இதோ இந்த உடலை உடனே தகனம் செய்ய வேண்டும். யாருக்காவது தெரிந்து விட்டால் காரியம் கெட்டு விடும். எங்கே? ரஞ்சனி! கட்டைகள் கொண்டு வந்து இங்கேயே சிதை அடுக்கு, பார்க்கலாம்!"

"என்னால் அது முடியாது!"

"ஏன் அப்படிச் சொல்கிறாய்? எனக்கு உதவி செய்ய மாட்டாயா?"

"புத்த சங்கத்திலிருந்து உம்மை ஏன் பிரஷ்டம் செய்தார்கள்? அதைச் சொன்னால் உதவி செய்வேன்."

"சுருக்கமாகச் சொல்கிறேன், கேள்! காஞ்சி மாமல்லன் படையெடுத்து வருகிறான் என்ற விஷயம் எனக்கு முன்னமே தெரியும். ஆனால் அதைச் சில காரணங்களுக்காக என் சகோதரனிடம் சொல்லாமல் இரகசியமாய் வைத்திருந்தேன். இது தெரிந்த போது நான் சகோதரத் துரோகமும் தேசத் துரோகமும் செய்து விட்டதாக இந்த நிர்மூடன் எண்ணினான். நான் உயிர் கொடுத்துக் காப்பாற்றி இவ்வளவு மேன்மைப் பதவிக்குக் கொண்டு வந்த என் சகோதரன் என்னைப் பார்த்து 'உயிரோடிருக்கும் வரையில் என் முகத்தில் விழிக்காதே!' என்று சொல்லி அனுப்பினான். அதன் பலனைத்தான் இப்போது இங்கே அநாதைப் பிரேதமாகக் கிடக்கிறான். நீயும் நானும் இவனை எடுத்துத் தகனம் செய்தாக வேண்டும்!" என்று சொல்லிப் பிக்ஷு பெருமூச்சு விட்டார். மறுபடியும் கூறினார்:—"இதெல்லாம் அஜந்தா கலைவிழாவின் போது நடந்தது. இந்த விஷயம் அஜந்தா சங்கிராமத்துப் புத்த பிக்ஷுக்களுக்குத் தெரிந்தது. இத்தனை காலமும் என்னால் கிடைத்த உதவிகளையெல்லாம் பெற்று வந்தவர்கள், நான் சக்கரவர்த்தியின் கோபத்துக்கு ஆளானேன் என்று தெரிந்ததும் உடனே என்னைச் சபித்துப் புத்த சங்கத்திலிருந்து பிரஷ்டம் செய்தார்கள். அதன் பலனை அவர்களும் அனுபவிக்க நேர்ந்தது! ரஞ்சனி! நீலகேசியை எதிர்ப்பவர்கள் யாராயிருந்தாலும் தப்பிப் பிழைக்க முடியாது. அவர்களுடைய கதி அதோ கதிதான்!"

"அஜந்தா பிக்ஷுக்களுக்கு அப்படி என்ன கதி நேர்ந்தது?" என்று காபாலிகை கேட்டாள்.

"வேறொன்றும் இல்லை. அப்புறம் ஒரு வாரத்துக்கெல்லாம் அஜந்தா பிக்ஷுக்கள் சங்கிராமத்தை மூடிவிட்டு உயிர் தப்புவதற்கு ஓடும்படி நேர்ந்தது. நாடு நகரங்களில் எல்லாம் 'அஜந்தா கலை விழா, புத்த பிக்ஷுக்களின் சூழ்ச்சி; காஞ்சி மாமல்லனுக்கு ஒத்தாசையாக அவர்கள் செய்த வஞ்சகமான ஏற்பாடு' என்ற வதந்தி பரவியது. வதந்திக்கு விதை போட்டவன் நான்தான். ஜனங்கள் கோபங்கொண்டு அஜந்தாவுக்குப் போய்ச் சங்கிராமத்தையும் அங்குள்ள சிற்ப சித்திரங்களையும் அழித்துப் போடுவதற்கு ஆயத்தமாகி விட்டார்கள். இது தெரிந்ததும் பிக்ஷுக்கள் அஜந்தாவுக்குப் போகும் அந்தரங்க பகிரங்க வழிகள் எல்லாவற்றையும் மூடி மறைத்து விட்டு வடக்கே ஹர்ஷனுடைய ராஜ்யத்தை நோக்கி ஓட்டம் பிடித்தார்கள். அப்புறம் அஜந்தா

# ஒப்புக் கொண்டவர்கள்

மகாத்மா காந்தி, காங்கிரஸ் அக்கிராசனர் அபுல் கலாம் ஆஸாத், பார்லிமெண்டரி போர்டு தலைவர் ஸர்தார் வல்லபாய் படேல் ஆகிய மாபெரும் தலைவர்களின் புத்திமதியை ஒப்புக்கொள்ள வேண்டும் என்பதற்குச் சாதகமாகச் சென்ற 18—4—46ல் நடந்த காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் முப்பத்தெட்டு சட்டசபை அங்கத்தினர்கள் வோட்டளித்தார்கள். காங்கிரஸ் பெருந் தலைவர்களின் யோசனைக்கு மரியாதை அளித்து காங்கிரஸ் கட்டுப்பாட்டை நிலைநாட்டிய அந்த முப்பத்தெட்டு அங்கத்தினரின் பெயர்களைப் பொன்னெழுத்தில் பொறிக்கத் தற்சமயம் வசதி யின்மையால் பொன் வர்ணத்தில் அச்சிடுகிறோம்.

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ சி. பெருமாள்சாமி ரெட்டியார், எம். எல். சி. | வ. ஆ. ஜி. |
| 2. | ஸ்ரீ என். அண்ணாமலைப் பிள்ளை, எம் எல். ஏ. | ,, |
| 3. | ஸ்ரீ டபிள்யூ. சீனிவாச ராவ், எம். எல். ஏ. | ,, |
| 4. | ஸ்ரீ வி. பொன்னுசாமிக் கவுண்டர், எம். எல். ஏ. | ,, |
| 5. | ஸ்ரீ பி. எம். வேலாயுதபாணி, எம். எல். ஏ. | ,, |
| 6. | ஸ்ரீ தங்கவேலு, எம். எல். ஏ. | ,, |
| 7. | ஸ்ரீ எஸ். கே. சடகோப முதலியார், எம். எல். சி. | சேலம் ஜி. |
| 8. | ஸ்ரீ நாகராஜ ஐயங்கார், எம். எல். ஏ. | ,, |
| 9. | ஸ்ரீ ஏ. சுப்ரமணியம், எம். எல். ஏ. | ,, |
| 10. | ஸ்ரீ எப். ஜி. நடேச செட்டியார், எம். எல். ஏ. | ,, |
| 11. | ஸ்ரீ ராஜாகுருநாத செட்டியார். எம். எல். ஏ. | ,, |
| 12. | ஸ்ரீ டாக்டர் ராஜன், எம். எல். சி. | திருச்சி ஜி. |
| 13. | ஸ்ரீ பி. ஆர். தேவர், எம். எல். ஏ. | ,, |
| 14. | ஸ்ரீ பொன்னம்பலக் கவுண்டர். எம். எல். ஏ. | ,, |
| 15. | ஸ்ரீ வி. ஐ. முனிசாமிப் பிள்ளை, எம். எல். ஏ. | தெ. ஆ. ஜி. |
| 16. | ஸ்ரீ பரமானந்த ராயர், எம். எல். ஏ. | ,, |
| 17. | ஸ்ரீமதி எம். அஞ்சலை அம்மாள், எம். எல். ஏ. | ,, |
| 18. | ஸ்ரீ ஆர். எஸ். சிதம்பர அய்யர், எம். எல். ஏ. | ,, |
| 19. | ஸ்ரீ கே. சுப்ரமணியம், எம். எல். ஏ. | கோவை ஜி. |
| 20. | ஸ்ரீ பி ஆர். கந்தசாமி கவுண்டர், எம். எல். ஏ. | ,, |
| 21. | ஸ்ரீ ரத்தினசாமி கவுண்டர், எம். எல். ஏ. | ,, |
| 22. | ஸ்ரீ வி. சி. பழனிசாமி கவுண்டர், எம். எல். ஏ. | ,, |
| 23. | ஸ்ரீ மனத்துணைநாத தேசிகர், எம். எல். சி. | தஞ்சை ஜி. |
| 24. | ஸ்ரீ ஏ. வேதரத்தினம், எம். எல். ஏ. | ,, |
| 25. | ஸ்ரீ தியாகுவாய்க்காரர், எம். எல். ஏ. | ,, |
| 26. | ஸ்ரீ ஏ. வெங்கட்ராமய்யர், எம். எல். ஏ. | ,, |
| 27. | ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர், எம். எல். ஏ. | மதுரை ஜி. |
| 28. | ஸ்ரீமதி லக்ஷ்மி பாரதி எம். எல். ஏ. | ,, |
| 29. | ஸ்ரீ எம். பட்டாபிராமய்யா, எம். எல். ஏ. | ,, |
| 30. | ஸ்ரீ டாக்டர் யூ. ராமா ராவ், எம். எல். சி. | சென்னை |
| 31. | ஸ்ரீ கே. வெங்கடசாமி நாயுடு, எம். எல். சி. | ,, |
| 32. | ஸ்ரீ ஜே. சிவஷண்முகம் எம். எல். ஏ. | ,, |
| 33. | ஸ்ரீ என். எஸ். வரதாச்சாரி, எம். எல். ஏ. | ,, |
| 34. | ஸ்ரீ கோவிந்தாச்சாரி, எம். எல். ஏ. | ஆந்திரா |
| 35. | ஸ்ரீ எஸ். சுப்பராம செட்டி, எம். எல். சி. | ,, |
| 36. | ஸ்ரீ பி. பீமா ராவ், எம். எல். சி. | ,, |
| 37. | ஸ்ரீ ராகவ மேனன், எம். எல். ஏ. | மலையாளம் |
| 38. | ஸ்ரீ ஏ. பி. ஷெட்டி, எம். எல். ஏ. | கர்னாடகம் |



வுக்குப் போக நானே பிரயத்தனம் செய்தேன். என்னாலேயே வழி கண்டு பிடிக்க முடியவில்லை. பிற்பாடு பார்த்துக் கொள்ளலாம் என்று திரும்பி வந்து விட்டேன். நல்ல சமயத்தில் தான் வந்தேன். ரஞ்சனி! எழுந்திரு! சீக்கிரம் நான் சொன்னபடி செய்! உடனே சிதை அடுக்கு! நெருப்புக் கொண்டு வா!"

"சக்கரவர்த்தியைத் தகனம் செய்த பிறகு என்ன செய்யப் போகிறீர்கள்?"

"ரஞ்சனி! சக்கரவர்த்தியின் மரணத்தைப் பற்றியோ, தகனத்தைப் பற்றியோ யாரிடமும் பிரஸ்தாபிக்கக் கூடாது. காற்றினிடம் கூடச் சொல்லக் கூடாது. இதைப் பரம ரகசியமாக வைத்திருக்க வேண்டும்!"

"எதற்காக ரகசியம், அடிகளே?"

"எல்லாம் அப்புறம் சொல்கிறேன், ரஞ்சனி! இப்போது ஒரு கணமும் வீணாக்க நேரமில்லை."

"வஞ்சக பிக்ஷுவே! நீர் ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை. காரணம் எனக்கே தெரியும்."

"உனக்கு என்ன தெரியும்?"

"இந்தப் பிரேதத்தைத் தகனம் செய்து விட்டு இரகசியச் சுரங்க வழியாக வாதாபி நகருக்குள் போகப் போகிறீர்! நீர்தான் சக்கரவர்த்தி என்று சொல்லிக்கொள்ளப் போகிறீர். சளுக்க சிம்மாசனத்தில் ஏறி அந்தக் காஞ்சி நகரத்து மூளியை உமக்கு அருகே உட்கார்த்தி வைத்துக் கொள்ளப் போகிறீர்!......"

நாகநந்தி கோபங் கொண்டு எழுந்து, "உன் வாக்குப்படியே செய்கிறேன். எப்படியாவது நீ தொலைந்து போ! இனிமேல் உன்னோடு......"

என்று மேலும் சொல்லுவதற்குள், காபாலிகை அவர் காலில் விழுந்து, "என்னை மன்னித்து விடுங்கள். நீர் சொல்வதைக் கேட்கிறேன்!" என்றாள்.

"உனக்குத்தான் என்னிடம் கொஞ்சங் கூட நம்பிக்கை இல்லையே? உன்னிடம் சொல்லி என்ன பிரயோஜனம்?"

"எனக்கு நம்பிக்கை உண்டாக்குவதற்கு ஒரு வழி இருக்கிறதே!"

"அது என்ன?"

"அந்த நடனப் பெண்ணை எனக்குக் கொடுத்து விடுங்கள்!"

"ரஞ்சனி! இத்தனை காலம் பொறுத்தாய். இன்னும் சில நாள் பொறுத்துக் கொள். இந்த வாதாபி முற்றுகை முடியும் வரையில் பொறுத்துக் கொள். சிவகாமியை ஒரு காரியத்துக்காக வைத்திருக்கிறேன் என்று உன்னிடம் சொல்லிவைத்தேனல்லவா? அந்தக் காரியம் இப்போது நெருங்கி வந்து விட்டது. மாமல்லன்மீது பழி வாங்கியதும் சிவகாமியை உனக்குத் தந்து விடுகிறேன். பிறகு, இந்த நீலகேசிதான் தக்ஷிண தேசத்தின் மகா சக்கரவர்த்தி; நீதான் சக்கரவர்த்தினி. சளுக்க — பல்லவ — சோழ — பாண்டிய — வேங்கி நாடுகள் எல்லாம் நம் இருவருடைய காலின் கீழே கிடக்கப் போகின்றன!" என்று நாகநந்தி என்கிற நீலகேசி கூறியபோது, நிலவொளியிலே அவருடைய கண்கள் தீப்பிழம்பைப் போல் ஒளி வீசின.

காபாலிகை ஒருவாறு சமாதானம் அடைந்தவளாகக் காணப்பட்டாள். நீலகேசியின் சொற்படி அவள் தன் குகைக்குச் சென்று அங்கிருந்து விறகுக் கட்டைகளைக் கொண்டு வந்து அடுக்கலானாள். அப்போது, நீலகேசியின் காதில் விழாதபடி அவள் தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டாள்:— "வஞ்சக பிக்ஷுவே! நீர் என்னை மறுபடியும் ஏமாற்றப் பார்க்கிறீர். ஆனால் உம்முடைய எண்ணம் ஒரு நாளும் பலிக்கப் போவதில்லை. நீர் எவ்வளவுதான் காலில் விழுந்து கெஞ்சினாலும், தேவேந்திர பதவியையே அளித்தாலும், அந்த மூளி சிவகாமி உம்மைக் கண்ணெடுத்துப் பார்க்க மாட்டாள். கடைசியாக, என் காலிலே வந்துதான் நீர் விழுந்தாக வேண்டும்!"

## அத்தியாயம் 37

## மந்திராலோசனை

வாதாபிப் பெரும் போரில் பல்லவ சைன்யம் மகத்தான வெற்றியடைந்து ஒருவார காலம் ஆயிற்று.

வாதாபிக் கோட்டையின் பிரதான வாசலுக்கு எதிரில் சற்றுத் தூரத்தில் பிரம்மாண்டமான ரிஷபக் கொடி வானளாவி உயர்ந்து கம்பீரமாகக் காற்றில் பறந்து கொண்டிருந்தது.

அதனடியில் இருந்த கூடாரத்திற்குள்ளே மாமல்லரின் மந்திராலோசனை சபை கூடியிருந்தது.

மாமல்லரைச் சுற்றிலும் வீற்றிருந்த மந்திரிமார்களின் முகங்களில் மாபெரும் போரில் வெற்றி பெற்ற பெருமித உணர்ச்சியோடு சிறிது கவலைக்கு அறிகுறியும் காணப்பட்டது.

மாமல்லரின் வீர சௌந்தரிய வதனத்திலோ அச்சமயம் எள்ளும் கொள்ளும் வெடித்துக் கொண்டிருந்தது!

மந்திராலோசனை சபையில் ஏதோ அபிப்பிராய பேதம் ஏற்பட்டுக் காரசாரமான விவாதம் நடந்திருக்க வேண்டும் என்று தோன்றியது.

அது வாஸ்தவந்தான்; அபிப்பிராய பேதத்துக்கும் விவாதத்துக்கும் காரணமாயிருந்தது வாதாபி நகரப் பிரமுகர்களிடமிருந்து வந்திருந்த சரணாகதி ஓலையேயாகும்.

• • •

போர்க்களத்திலிருந்து திரும்பி வந்ததும் பல்லவ சைன்யம் இரண்டு பகுதியாகப் பிரிக்கப்பட்டது. ஒரு பகுதியைக் கிழக்கேயிருந்து வந்து கொண்டிருந்த வேங்கிப் படையைத் தாக்குவதற்கு வசதியாக இரண்டு காத தூரம் கிழக்கே கொண்டுபோய்

நிறுத்திவைத்தார்கள். இன்னொரு பகுதி சைன்யத்தைக் கொண்டு வாதாபிக் கோட்டையைத் தாக்கிக் கைப்பற்றுவதற்கு ஆயத்தம் செய்தார்கள்.

கோட்டையைத் தாக்கும் விஷயத்தில் மாமல்லர் மிகவும் ஆத்திரம் கொண்டிருந்தார். பெரும் போரில் வெற்றி பெற்றுத் திரும்பிய வீரர்களுக்கு இளைப்பாற அவகாசம் கொடுப்பதற்குக் கூட அவர் விரும்பவில்லை. சேனாதிபதியையும் மற்றவர்களையும் ரொம்பவும் துரிதப்படுத்தினார். தாமே குதிரை மீதேறிக் கோட்டையைச் சுற்றி வந்து ஆங்காங்கே இருந்த வீரர்களை உற்சாகப்படுத்தினார். ஒரே மூச்சில் அகழியைக் கடப்பது எப்படி, கோட்டை மதிள்மீது தாவி ஏறுவது எப்படி, அங்கே காவல் இருக்கக் கூடிய சளுக்க வீரர்கள்மீது ஈட்டியை எறிந்து கொல்லுவது எப்படி, கோட்டைக்குள் புகுந்ததும் அவர்கள் செய்ய வேண்டிய காரியங்கள் என்னென்ன, — ஆகிய விஷயங்களைப் பற்றி மாமல்ல சக்கரவர்த்தி தாமே அந்த வீரர்களுக்கு விவரமாகக் கூறினார். மாமல்லரின் இத்தகைய நடவடிக்கைகளைக் குறித்துச் சேனாதிபதி பரஞ்சோதி கோபமும் வருத்தமும் அடைந்து, "இந்தக் காரியங்களையெல்லாம் என்னிடம் விட்டு விடக் கூடாதா? என்னிடம் தங்களுக்கு நம்பிக்கை இல்லையா?" என்று கேட்கும்படி நேர்ந்தது.

மாமல்லர் இப்படிக் கோட்டைத் தாக்குதலை ஆரம்பிக்கும் விஷயத்தில் அவசரப்பட்டதற்குக் காரணம், எங்கே தாக்க ஆரம்பிப்பதற்கு முன்னால் கோட்டைக்குள்ளிருந்து சமாதானத் தூது வந்து விடுமோ என்ற பயந்தான். அவர் பயந்தபடியே உண்மையில் நடந்துவிட்டது. மறுநாள் கோட்டைத் தாக்குதலை ஆரம்பிக்கலாம் என்று தீர்மானிக்கப்பட்டிருந்த சமயத்தில் கோட்டை முன் வாசலில் சமாதான வெள்ளைக் கொடி தூக்கப்பட்டது. நூலேணி வழியாக இருவர் இறங்கி வந்தார்கள். சேனாபதி பரஞ்சோதியிடம் தாங்கள் கொண்டு வந்த ஓலைகள் இரண்டையும் சமர்ப்பித்து விட்டுத் திரும்பினார்கள்.

அந்த ஓலைகள் இரண்டில் ஒன்று கோட்டைத் தலைவன் தளபதி பீமசேனன் சக்கரவர்த்திக்கு எழுதிக் கொண்டது. வாதாபி நகரப் பிரமுகர்கள் கூடி யோசித்துக் கோட்டையை எதிர்ப்பில்லாமல் காஞ்சி சக்கரவர்த்தியிடம் ஒப்படைத்து விடுவதென்று தீர்மானித்திருப்பதாகவும், வாதாபி அரண்மனைகளிலுள்ள சகல செல்வங்களையும் கோட்டைக்குள்ளே யிருக்கும் யானைப்படை குதிரைப் படைகளையும் மாமல்ல சக்கரவர்த்திக்குச் சமர்ப்பித்துவிட இணங்குவதாகவும், இன்னும் அவர் விதிக்கும் மற்ற எல்லா நிபந்தனைகளுக்கும் உட்படச் சம்மதிப்பதாகவும் அந்த ஓலையில் எழுதியிருந்தது.

மாமல்ல சக்கரவர்த்தி கருணை கூர்ந்து கோட்டையைத் தாக்காமலிருக்க வேண்டுமென்றும், நகர மாந்தர்களையும் அவர்களுடைய வீடு வாசல் சொத்து சுதந்திரங்களையும் காப்பாற்றிக் கொடுத்து அருள வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டிருந்தார்கள். மேற்படி சமாதான கோரிக்கையை மாமல்ல சக்கரவர்த்தி ஒப்புக் கொள்ளக் கருணை கூர்ந்தால் கோட்டைக் காவல் தலைவனாகிய தளபதி பீமசேனன் தன் கீழுள்ள எல்லா வீரர்களுடனும் சரணாகதியடையச் சித்தமாயிருப்பதாகத் தெரிவித்து ஓலையை முடித்திருந்தான்.

மேற்படி சமாதான ஓலையைப் பற்றி எந்த விதத்திலும் சந்தேகப்படுவதற்கு இடம் இருக்கவில்லை. உண்மையும் அப்படித்தான். கோட்டை வாசல்களின் உச்சியிலிருந்த காவல் மண்டபங்களில் நின்று கவனித்த வாதாபி வாசிகள் பல்லவ சைன்யத்துக்கும் சளுக்க சைன்யத்துக்கும் நடந்த பெரும் போரைப் பற்றியும் அதன் முடிவைப் பற்றியும் ஒருவாறு தெரிந்து கொண்டார்கள். போரில் பல்லவ சைன்யம் வெற்றி பெற்றது என்பது ஸ்பஷ்டமாகத் தெரிந்துவிட்டது. அதன் பயனாக வாதாபி மக்களிடையே பெரும் பீதி உண்டாகிப் பரவிற்று. வீதிகளிலும் வீடுகளிலும் ஓலமும் புலம்பலும் எழுந்தன. கோட்டைக் காவலுக்கு அவசியமான வீரர்களோ யுத்த தளவாடங்களோ இல்லையென்பதும், முற்றுகை நீடிக்கும் பட்சத்தில்

அதைச் சமாளிப்பதற்கு வேண்டிய உணவுப் பொருள் நகருக்குள் சேமித்து வைக்கப்படவில்லையென்பதும் எல்லாருக்கும் தெரிந்திருந்தது. ஒரு மாதம் முற்றுகை நீடிக்கும் பட்சத்தில் நகர மக்கள் பட்டினி கிடக்கும்படி நேரிடும். சத்துருப் படைகள் கோட்டையைத் தாக்கி ஜயித்து உள்ளே பிரவேசித்தால், அப்போது அவ் வீரர்களிடம் ஜனங்கள் எவ்வித கருணையையும் எதிர்பார்க்க முடியாது. லட்சக்கணக்கான ஸ்திரீகளும், குழந்தைகளும், வயோதிகர்களும் அதோகதியடையும்படி நேரிடும்.

இதையெல்லாம் நன்றாக யோசித்து வேறு வழியில்லையென்று கண்டதின் பேரில்தான் வாதாபி நகரப் பிரமுகர்களும் கோட்டைக் காவலன் பீமசேனனும் மேற்கண்டவாறு சமாதான ஓலை அனுப்பினார்கள்.

அதன்பேரில் யோசித்து முடிவு செய்வதற்கு மாமல்லர் மந்திராலோசனை சபை கூட்டினார். இந்த மந்திராலோசனை சபையில் மாமல்லர் சிறிதும் பொறுமையின்றி ஆத்திரப்பட்டு எரிந்து விழுந்ததைப் போல் அதற்கு முன் எப்போதும் நடந்து கொண்டது கிடையாது. ஓலையைப் பார்க்கும் போதே அவருக்குக் கோபம்கோபமாய் வந்தது. எல்லாரும் கேட்கும்படி ஓலை படிக்கப்பட்டபோது மாமல்லரின் கண்களில் தணல் பறந்தது.

எந்தக் காரணத்தினாலோ அந்தச் சமாதானக் கோரிக்கை சக்கரவர்த்திக்குப் பிடிக்கவில்லையென்பது அவருடைய முகபாவத்திலிருந்தும் பேச்சு வார்த்தைகளிலிருந்தும் மற்றவர்களுக்கு நன்றாய்த் தெரிந்தது.

எனினும் சக்கரவர்த்தி அந்த ஓலை விஷயமாக அவர்களுடைய அபிப்பிராயத்தைக் கேட்டபோது தங்கள் மனதில் பட்டதை ஒவ்வொருவரும் உள்ளது உள்ளபடி சொன்னார்கள். அதாவது சரணாகதியை ஒப்புக் கொண்டு நகரத்தையும் நகர மக்களையும் காப்பாற்ற வேண்டியதுதான் என்று சொன்னார்கள்.

சக்கரவர்த்தியின் கோபம் மேலும் மேலும் அதிகமாகி வந்தது. ஒவ்வொருவரும் சமாதானத்துக்கு அனுகூலமாக அபிப்பிராயம் சொல்லி வந்தபோது மாமல்லர் "அப்படியா?" "ஓஹோ!" என்று பரிகாசக் குரலில் சொல்லிக் கொண்டு வந்தார். சேனாபதி பரஞ்சோதியும் இலங்கை மானவன்மரும் மட்டும் அபிப்பிராயம் சொல்லாமலிருந்தார்கள்.

"நீங்கள் ஏன் ஒன்றும் சொல்லாமல் சும்மா நிற்கிறீர்கள்? சேனாபதி! உங்களுடைய அபிப்பிராயம் என்ன?" என்று மாமல்லர் கேட்டார்.

"பிரபு! நானும் சண்டையை நிறுத்த வேண்டும் என்றுதான் அபிப்பிராயப்படுகிறேன். குற்றமற்ற ஜனங்களைக் கஷ்டப் படுத்துவதில் என்ன பிரயோஜனம்? மேலும் சரணாகதி அடைவதாக அவர்கள் *சக்கரவர்த்தியிடம் உயிர்ப்பிச்சை கேட்கும்போது வேறு என்ன செய்ய முடியும்?" என்றார் பரஞ்சோதி.

"சேனாபதி! என்ன சொல்கிறீர்? நீர் கூடவா இப்படியெல்லாம் தர்ம நியாயம் பேச ஆரம்பித்து விட்டீர்? புலிகேசி நம் நாட்டில் செய்த அக்கிரமங்களை எல்லாம் மறந்து விட்டீரா? இந்த நகரத்தை நாம் எரித்துச் சாம்பலாக்க வேண்டிய அவசியம் இருக்கிறதென்பது உமக்குத் தெரியாதா? தெரிந்திருந்துமா இப்படிப் பேசுகிறீர்? திடீரென்று உங்களுக்கெல்லாம் என்ன வந்து விட்டது? யுத்தம் போதும் போதும் என்று ஆகிவிட்டதா? இரத்தத்தைக் கண்டு பயந்து விட்டீர்களா? உயிர்மேலும் உடைமை மேலும் ஆசை வந்து விட்டதா?...... மானவன்மரே! நீர் ஒருவராவது என்னுடைய கட்சியில் இருக்கிறீரா? அல்லது நீரும் இந்தப் புத்த பகவானுடைய பரமானந்த சிஷ்யர்களுடன் சேர்ந்து சாத்வீகத்தை மேற்கொண்டு அஹிம்சாவாதியாகி விட்டீரா?" என்று தீச்சுடர் போன்ற வார்த்தைகளை மாமல்லர் பொழிந்தார்.

மாமல்லருடைய மனப் போக்கை மானவன்மர் நன்கு உணர்ந்திருந்தார். சிவகாமிக்கு மாமல்லர் கொடுத்திருந்த வாக்குறுதியை எந்தவிதத்திலும் நிறைவேற்ற விரும்புகிறார் என்பதையும், சமாதானக் கோரிக்கையை ஒப்புக் கொண்டால் மேற்படி வாக்குறுதியை நிறைவேற்ற முடியாதென்பதையும் அவர் உணர்ந்திருந்தார்.

உண்மையில் சேனாபதி பரஞ்சோதி சமாதானத்துக்குச் சாதகமாக அபிப்பிராயம் சொன்னது மானவன்மருக்கு மிக்க வியப்பை அளித்தது.

சமாதானத்துக்கு இணங்கி விட்டால், கோட்டைத் தாக்குதலுக்கென்று மானவன்மர் விசேஷப் பயிற்சி அளித்திருந்த யானைப்படையை உபயோகப்படுத்துவதற்குச் சந்தர்ப்பமே இல்லாமற் போய்விடும் என்பது ஒரு பக்கம் அவர் மனதில் கிடந்தது.

இந்த நிலைமையில் மானவன்மர், "பிரபு! பல்லவ நாட்டு வீர தளபதிகள் எல்லாரும் ஒருவித அபிப்பிராயம் சொல்லியிருக்கும் போது வேறு அபிப்பிராயம் கூற எனக்குத் தயக்கமாயிருக்கிறது. அதிலும் சேனாபதியாருக்கு மாறாக எதுவும் சொல்ல நான் விரும்பவில்லை!" என்றார்.

மாமல்லர் அதிகாரத் தொனியில் "மானவன்மரே! எல்லாரும் ஒரே அபிப்பிராயத்தையே தெரிவிக்க வேண்டுமென்றிருந்தால் இந்த மந்திராலோசனை சபை கூட வேண்டியதில்லை. இங்கே எல்லாரும் தங்கள் தங்கள் அபிப்பிராயத்தைத் தைரியமாகக் கூறலாம். யாருக்கும் அஞ்ச வேண்டியதில்லை!" என்று கர்ஜித்தார்.

"பிரபு! தாங்கள் ஆக்ஞாபிப்பதால் சொல்கிறேன். இந்தச் சமாதானக் கோரிக்கையை ஒப்புக் கொள்ளக் கூடாது என்று எனக்குத் தோன்றுகிறது. செய்கிற பாதகத்தையெல்லாம் செய்து விட்டு அப்புறம் சரணாகதி அடைந்துவிட்டால் போதுமா?..." என்பதற்குள் சேனாபதி பரஞ்சோதி குறுக்கிட்டு, "வாதாபி நகர ஜனங்கள் என்ன பாதகத்தைச் செய்தார்கள்? புலிகேசி செய்த காரியத்திற்கு அவர்களை எப்படிப் பொறுப்பாக்க முடியும்?" என்று கேட்டார்.

அதற்கு மானவன்மர், "சேனாபதி இவ்விதம் சொல்வது எனக்கு மிக்க வியப்பாயிருக்கிறது. புலிகேசி செய்த அக்கிரமங்களையெல்லாம் இந்த ஜனங்கள் பார்த்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டுதானே இருந்தார்கள்? அந்த அக்கிரமங்களைத் தடுப்பதற்கு இவர்கள் எந்த விதத்திலாவது முயன்றார்களா? பாதகன் புலிகேசிக்குப் பலம் அளித்ததெல்லாம் இவர்கள்தானே? புலிகேசி கொள்ளையடித்துக்கொண்டு வந்த பொருள்களையெல்லாம் பகிர்ந்து அனுபவித்தது இவர்கள்தானே? புலிகேசி சிறைப் பிடித்துக் கொண்டு வந்த ஆண்களையும் பெண்களையும் அடிமை கொண்டு வேலை வாங்கியது இவர்கள்தானே? ஆயனச் சிற்பியாரின் குமாரியை இந்த நகரின் நாற்சந்திகளில் நடனமாடச் சொல்லிப் பார்த்து இந்த நகர மக்கள் பல்லவ சாம்ராஜ்யத்தையே அவமதித்து அழியா வசைக்கு ஆளாக்கவில்லையா? இதையெல்லாம் நமது வீர சேனாபதி மறந்து விட்டாரா?" என்று மானவன்மர் கூறியபோது மாமல்லரின் பார்வை கூரிய வாளைப்போல் சேனாபதி பரஞ்சோதியின்மீது பாய்ந்தது.

அப்போது சேனாபதி பரஞ்சோதி, "பல்லவேந்திரா! மானவன்மருக்கு ஞாபகம் இருக்கும் விஷயம் எனக்கு ஞாபகம் இல்லாமல் போய்விடாது. அதைப்பற்றித் தங்களிடம் தனியாகப் பிரஸ்தாபிக்க வேண்டுமென்று இருந்தேன். ஆனால் மானவன்மர் சிவகாமி தேவியைப் பற்றிப் பேச்சு எடுத்து விட்டபடியால் நானும் இப்போதே சொல்லி விடுகிறேன். சமாதான ஓலை கொண்டுவந்த தூதர்கள் இன்னொரு ஓலை எனக்குத் தனியாகக் கொண்டு வந்தார்கள். சிவகாமிதேவி எழுதிய அந்த ஓலை இதோ இருக்கிறது. தயவு செய்து பார்த்தருள வேண்டும்!" என்று சொல்லித் தமது வாளின் உறையிலிருந்து ஓலை ஒன்றை எடுத்துச் சக்கரவர்த்தியிடம் கொடுத்தார்.

பல்லவேந்திரர் அந்த ஓலையைப் படித்தபோது ஏற்கெனவே சிவந்திருந்த அவருடைய கண்கள் இன்னும் அதிகமாகச் சிவந்து தணற் பிழம்புகளாகத் தோன்றின. அளவு மீறிய கோபத்தினால் ஓலையைப் பிடித்திருந்த அவருடைய கைகள் நடுநடுங்கின.

படித்து முடித்ததும் அந்தப் பனை ஓலைச் சுருளைச் சக்கரவர்த்தி தமது இரு கரங்களினாலும் கிழித்துப் போட யத்தனித்தார்.

அப்போது சேனாபதி குறுக்கிட்டு, "பல்லவேந்திரா! அந்த ஓலை என்னுடையது. கருணைகூர்ந்து திருப்பிக் கொடுத்தருள வேண்டும்!" என்றார்.

# மஹத்தான ஆரம்ப விழா

சென்னை

# கெயிட்டி டாக்கீஸில்

26-4-46 வெள்ளிக்கிழமை முதல்




SOUTHERN THEATRES LTD., COIMBATORE & SALEM.

—நடிகர்கள்—

செல்லப்பா, சாமா, பி. எஸ். கோவிந்தன், நாகர்கோவில் மஹாதேவன், சந்தானலக்ஷ்மி, சிவபாக்கியம், தவமணி தேவி, துரைராஜ், ஜெயா, காளி என். ரத்தினம், ராஜகாந்தம்

தினசரி 2 காட்சிகள் மாலை 6-15 இரவு 9-30
வெள்ளி, சனி, ஞாயிறு மாட்டினி பகல் 3-15

## டி. கே. புரொடக்ஷன்ஸ் ரிலீஸ்

# இதுவா மரியாதை?

**எஸ்.வி.எஸ்**

அப்போது எனக்கு ஆங்கிலத்தை எழுத்துக் கூட்டிப் படிக்கும் வயது. ஒரு நாள் ஒரு கடிதம் வந்தது. மேல் விலாசத்திலிருந்த எழுத்துக்களைக் கூட்டியதும் அது எங்கள் அப்பாவின் பெயர் என்பதில் எவ்வளவோ சந்தோஷம் ஏற்பட்டது. ஆனால் அடுத்த நிமிஷம் ஒரே குழப்பமாகப் போய்விட்டது: ராமநாதய்யர் 'அவல்' எப்படி ஆவார், அவலாக எப்படி ராமநாதய்யர் ஆவார் என்று ஒரே குழப்பம், பாருங்களேன் : 'ராமநாதய்யர் அவல்' என்றுதானே விலாசத்தில் போட்டிருக்கிறது!

"அப்பா! நீங்கள் என்ன அவலா?" என்று கடிதத்தைக் கொடுத்துக் கேட்டேன்.

"இல்லேடா? 'ராமநாதய்யர் அவர்கள்' என்பதன் சுருக்கம் அது!" என்றார்.

அது இன்னும் குழப்பத்தை அதிகப் படுத்தியதே தவிர்த்துக் குறைக்கவில்லை.

"ராமநாதய்யர் ஏன் அவர்களாகிறார்? இவர் இங்கேதானே இருக்கிறார். பின் இவர் ஏன் அவர்களாகிறார்? ராமநாதய்யர் என்ற பெயரும் 'அவர்கள்' என்பதும் சேர மாட்டேன் என்கிறதே" என்று விழித்தேன். மறுபடியும் மறுபடியும் அப்பாவைக் கேட்டதற்கு, "போடா, மரியாதையாகச் சொல்லவேண்டும் என்றால் அப்படித்தான் சொல்லவேண்டும், போ!" என்று விரட்டி விட்டார்.

இது என்ன மரியாதை? புரியவில்லையே என்று நினைத்துக் கொண்டேன்!

ஒருதரம், என் திருநெல்வேலி நண்பர் ஒருவர் சென்னைக்கு வந்திருந்தார். சின்னத் தம்பி முதலி தெரு, தம்புச் செட்டித் தெரு, நயினியப்ப நாயக்கன் தெரு என்றெல்லாம் வழங்குவதைப் பார்த்து ரொம்பவும் கஷ்டப்பட்டார்.

அங்கெல்லாம் முதலியார், செட்டியார், நாயக்கர் என்றுதான் சொல்லுவார்களாம். அடாடா, அப்படி இல்லை. முதலியார் வாள், செட்டியார்வாள், நாயக்கர்வாள் என்றுதான் சொல்லுவார்களாம்.

எனக்கு 'வாள்' 'வாள்' என்று அடிக்கடி சொல்லுவது பிடிக்கவில்லை. அவர்கள் என்பதன் தமிழ்ச் சுருக்கம் 'வாளா'க வந்திருக்கிறதா? அதற்கு என்ன செய்ய? அவரைப் பார்த்து "உங்கள் ஊர்க் காரர்கள் இந்த 'வாள்' வியாபாரம் யாரிடம் ஐயா கற்றுக் கொண்டார்கள்?" என்று எரிச்சலோடு கேட்டேன்.

அதற்குப் பதில் அவர் "இதெல்லாம் என்ன, ஸார்வாளிடம் படிக்கிற காரியமா? பழக்கத்தில் வருகிறதல்லவா?" என்றார்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது "இது யார், ஐயா? புதிதாக இருக்கிறதே 'ஸார்வாள்?'" என்று கேட்டேன். "ஸார் வாள் தெரியாதா? நீங்கள் பள்ளிக்கூடத்தில் படிக்கவில்லையா, என்ன? உங்கள் வாத்தியார்வாளை ஸார் என்றுதானே கூப்பிடுவீர்கள்? பின் அவர் 'ஸார்வாள்' தானே!" என்றார்.

'ஸார்' என்று கூப்பிடுவதே மரியாதைக் காகத்தான். "இந்தத் திருநெல்வேலிக் காரர்கள் பலே பேர்வழிகள். மரியாதைக்கே மரியாதை செய்கிறார்களே! ஸார் வாளாமே!" என்று எண்ணிக்கொண்டிருந்தேன். 'ஸேர்' என்று ஒரு குரல் வந்தது.

ஒரு முழ உயரத்துக்குத் தூக்கி வாரிப் போட்டது. இப்படிக் கூப்பிட்டது அந்தத் திருநெல்வேலி நண்பர்தான்! என்னைத் தான், அதுவும்.

"ஐயா, நீர் நம்மை, ரொம்ப ரொம்ப மரியாதை செய்து மூச்சுத்திணற அடித்து விடுவீர் போலிருக்கிறதே!" என்றேன்.

---



"என்னப்பா! யாராவது போலீஸ் காரன் பார்த்துப் பிடித்துக் கொண்டால் என்ன செய்கிறது?"

"கவலைப்படாதே; இன்னைக்கு போலீஸ்காரர்க ளெல்லாம் 'ஸ்டிரைக்' பண்ணியிருக்கா. அதனாலே யாரும் பிடிக்க மாட்டா."

"ஆனால் நீங்கள் அவமரியாதை செய்துதான் என்னை அனுப்புவது என்று முடிவு செய்திருக்கிறீர்கள் போலிருக்கிறதே" என்றார்.

"ஐயோ! அப்படியெல்லாம் ஒன்றுமில்லையே!" என்றேன்.

"'நீர்' என்று சொல்லுவது மரியாதைக் குறைச்சலாக நாங்கள் நினைப்போம். ஆகையால் 'நீங்கள்' என்றுதான் சொல்லுவோம்" என்றார் நாருக்காக.



இந்த மரியாதை விஷயமே, அந்தந்த ஊர்க்காரர்களுக்குத்தான் புரிகிறதே தவிர மற்றவர்களுக்குப் புரிகிறதில்லை.

சென்னையை எடுத்துக் கொள்வோம். தெருவில் காய்கறி விற்கும் கூடைக்காரன் "என்ன சாமி, நான் வெண்டைக்காய் விலை எட்டணா சொன்னா, நீ ஆறணா கேக்கிறயே?" என்கிறான்.

சென்னை வாசிகளாகிய நமக்கு அல்லவா தெரியும் அவன் 'நீ' 'நீ' என்று சொல்லும்போது எவ்வளவு மரியாதை கொடுத்துப் பேசுகிறான் என்று!

"ஏண்டி" என்று கூப்பிட்டாலே அவளுக்கு ஏதோ அவமரியாதை செய்துவிட்டதாகத் தோன்றுகிறது. அந்த வார்த்தையில் தொனிக்கும் மரியாதையை விட எவ்வளவோ மரியாதை மனசில் வைத்துக் கொண்டுதான் சொல்லுகிறோம். இருந்தாலும் அவளுக்கு விகல்பமாகப் படுகிறது. பாருங்கள், அவள் சொல்லுகிறதை: "உங்கள் கதாநாயகர்கள் தங்கள் நாயகிகளை 'ஏண்டி' 'தோண்டி' என்று கூப்பிட்டதாகவா எழுதுகிறீர்கள்! உங்கள் கதாநாயகர்கள் சொல்வதைக் கூடவா உங்களுக்குச் சொல்ல வக்கில்லை" என்கிறாள்.

'வக்கில்லை, வகையில்லை' — எவ்வளவு அழுத்தமான வார்த்தை! இதுவும் சொல்லிவிட்டு "நாங்கள் எவ்வளவு மரியாதை கொடுத்துப் பேசுகிறோம், உங்களை!" என்று சொல்லுகிறாள்.

நமக்கு இதுவா மரியாதை? சரிதான். இன்னும் மரியாதை இல்லாமல் பேசினால் எப்படியிருக்குமோ என்று நினைக்கிறோம்.

ஆனால், கடவுள் என்ன இருந்தாலும் கெட்டிக்காரர். "எனக்கு மரியாதையே வேண்டாம்; நீ என்று கூப்பிட்டாலே போதும்" என்கிறார்.

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 139. விடா அம்பு மழை

சீதையும் லக்ஷ்மணனும் பர்ணசாலையில் நின்று விடுகிறார்கள்.

ராமன் யுத்த சன்னத்தனாய் நடந்தேறி வருகிறான்.

அப்படி வருவதைப் பார்த்து கொண்டான் கரன். "ஓ, இந்த நரனை நானே கொன்று தீர்க்கிறேன்" என்று போருக்கு முற்பட்டு வருகிறான்.

அப்போது அகம்பன் என்ற சோதிட அரக்கன் "இது நல்ல சகுனம் அல்ல. போருக்குப் போகலாகாது" என்று சொன்னான்.

ஆனால் கரன் அந்த வார்த்தையை மதிக்கவில்லை. போருக்குப் போகும்படியாகவே சேனையை ஏவினான்.

படை வீரர்களும் அப்படியே போய்ப் பலவிதமான ஆயுதங்களைப் பிரயோகித்துப் போர் செய்தார்கள். ஆனால் அத்தனை ஆயுதங்களும் ராமனுடைய அம்புகளால் நொறுங்கிப் போய்விட்டன. பிறகு அந்த வீரர்களும் அழிந்து பட்டனர். மிஞ்சியிருந்தவன் கரன் தான். கரனுக்குப் பின் அணியாகச் சில சேனைத் தலைவர்கள் தங்கள் தங்கள் படைகளோடு நின்றார்கள்.

கரனது படைகள் எல்லாம் அழிந்து விட்டன என்று தெரியவந்ததும், திரிசிரா என்னும் சேனைத் தலைவன் தன்னுடைய படைகளோடு போர் செய்ய முன்னேறி வருகிறான்.

சந்தம்

தானன தானன
தான தன்னன

அந்தலைத், தானைசூழ்
அளவில் ஆற்றலன்,
முந்தலைக் குரிசில்பொன்
முடியன், முக்கணான்
கைத்தலைச் சூலமே
அனைய காட்சியான்,
வைத்தலைப் பகழியால்
மழைசெய் வில்லினான்.

[அந்தலை: கரனது படைகள் எல்லாம் நிர்மூலமான அந்தச் சமயத்தில்; தானை சூழ் அளவில் ஆற்றலன்: சதா படை சூழ்ந்துள்ள மகா சக்தி வாய்ந்த வீரன்; முந்தலைக் குரிசில் பொன் முடியன்: சிரம் போன்று சிறந்து விளங்கும் மூன்று கிரீடங்களைப் படமாகத் தரித்துள்ளவன்; குரிசில்: சிறந்த; முக்கணான் கைத்தலைச் சூலமே போலும் தோற்றத்தான்: சிவபிரான் ஏந்தியுள்ள திரிசூலத்தையே போலும் தோற்றத்தான்; வைத் தலைப் பகழியால்: கூர்மையான நுனி கொண்ட அம்பாகிய — மழையை வருவித்த வில்லினான்.

குறிப்பு: மூன்று பயங்கரமான தலைகள் போலக் கிரீடம் தரித்திருந்த காரணத்தால் "திரிசிரா" என்று அவனுக்குப் பெயர்.]

திரிசிரா எய்த அம்புகள் எல்லாம் ராமன் பிரயோகித்த கணைகளால் நொறுங்கிப் போய்விட்டன.

தூவிய சரம்எலாம்
துணிய வெங்கணை
ஏவினன் இராமனும்;
ஏவி, எழ்இரு
பூவியல் வாளியால்
பொலங்கொள் தேர்அழித்(து)
ஆவி,வெம் பாகனை
அழித்து மாற்றினான்.

[தூவிய சரம் எலாம் துணிய: திரிசிரா தொகுதி தொகுதியாக எய்த அம்புகள் எல்லாம் முறிந்து ஒழியும்படி; கணை: பேரம்பு; எழிரு பூ இயல்வாளியால்: பூ வேலைப்பாடுகள் செய்துள்ள சுட்டி போன்ற பதினாறு அம்புகளால்; பொலங்கொள் தேர் அழித்து: திரிசிராவின் அழகிய தேரை அழித்து; ஆவி வெம்பாகனை அழித்து மாற்றினான்: தேர்ப் பாகனது ஆவியையும் நீக்கி ஒழித்தான்.]

தேவர்கள் என்று சொல்லுகிறார்களே அவர்கள், மேலே இருந்து பார்த்துக் கொண்டிருந்தால் திரிசிராவின் தேரும் தேர்ப்பாகனும் அழிந்து போனதற்கே

கைதட்டி ஆரவாரம் செய்திருப்பார்கள். ஆனால் அவர்கள் அது செய்ய வில்லை. அப்படி ஆரவாரம் செய்வதற்கு அடுத்தாற்போல் ஒரு வேலை செய்தான் ராமன்.

ஒரு பெரிய அம்பு. அதன் நுனியில் பொன் அழுந்தி இருந்தது. அந்த அம்பு என்ன செய்கிறதென்று பார்க்கலாம்.

அன்றியும் அக்கணத்(து)
அமரர் ஆர்த்தெழ,
பொன்தரி வடிம்புடைப்
பொருவில் வாளியால்,
வன்தொழில் திரியவன்
மகுட மாத்தலை
ஒன்றொழித்(து) இரண்டையும்
உருட்டி னான்அரோ!

[அன்றியும்: திரிசிராவின் தேரையும் பாகனையும் அழித்தது போக: அக்கணத்து அமரர் ஆர்த்தெழ: வேலை செய்த அந்த க்ஷணத்திலேயே தேவர்கள் ஆரவாரிக்கும்படி; பொன்தரி வடிம்பு உடை: பொன் அழுந்தியுள்ள நுனி கொண்ட; பொருவு இல் வாளியால்: அபூர்வமான ஒரு பெரிய அம்பினால்; வன்தொழில் தியவன்: முரட்டுத் தொழில் செய்யும் திரிசிராவின்; மகுட மாத்தலை ஒன்று ஒழித்து: தலைபோல் செய்த மகுடங்கள் மூன்றில் ஒன்று மாத்திரம் மிஞ்சியிருக்கும்படி: இரண்டையும் உருட்டினான்: பக்கத்து இரண்டு முடியையும் அற்று விழுந்து மண்ணில் உருளும்படி செய்தான்; அரோ: அடடா!]

திரிசிரா திரிசிரா என்பதாக நாடெங்கும் வீரத்துக்குரிய பேராய் இருந்தது. இப்போது அந்தப் பேர் ஒழிந்து போய் விட்டது. இதைவிட அவமானமான காரியம் திரிசிராவுக்கு ஏற்பட முடியாது. ஆங்காரம் எப்படி உண்டாகும் என்று யூகித்துக் கொள்ள வேண்டியதுதான்.

தேர்அழிந்(து), அவ்வழித்
திரிசி ராவனும்
பேர்அழிந்(து), அதனினும்
மறம்பி ழைத்திலன்;
வார்அழிந்(து) உமிழ்சிலை,—
வான நாட்டுழிக்
கார்இரிந் தாலெனக்,—
கணைகள் சிந்தினான்

[அதனினும் மறம் பிழைத்திலன்: வாய்ப்பாய் நின்று போர் செய்யத் தேரில்லை, இரண்டு சிரம் போய் அவமானமும் ஏற்பட்டது. ஆனாலும் சிறிதும் வீராவேசம் குறைய வில்லை; வார் அழிந்து உமிழ் சிலை: நாணைப் புதுப்பித்துப் புதுப்பித்துத் தெறித்துக் கொண்டிருந்த வில்லைக் கொண்டு; கார் இரிந்தால் எனக் கணைகள் சிந்தினான்: தேர் ஒழிந்து போகவும் கீழே இறங்கி நின்று அம்புகளைத் தொடுத்த காரியம் மேகம் ஒன்று மண்ணில் இறங்கி மழையைப் பொழிந்தது போல் இருந்தது.]

வில்லில் நாண் இற்றுப் போகிறது. புது நாணைக் கட்டிக் கட்டி அம்புகளைப் பொழிந்து கொண்டிருக்கிறான் அரக்கன். இதற்கு முடிவு கிடைக்காதா என்று ஆத்திரம் உண்டாகிறது ராமனுக்கு. என்ன நடக்கிறது பார்க்கலாம் அடுத்த இதழில்.

● ● ●

# படித்த மனிதரும் பட்டிக்காட்டானும்!

படித்த மனிதர் ஒருவர் ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். அவருக்குப் பொழுது போக வில்லை. எதிரில் உட்கார்ந்திருந்த படிப்பு வாசனை யற்ற பட்டிக்காட்டானுடன் பேசி ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டார். அதாவது ஒரு விடுகதை போடுவது; அதற்கு அவரால் பதில் சொல்லத் தெரியா விட்டால் படித்த மனிதர் ஒரு ரூபாய் கொடுத்து விடவேண்டும். பட்டிக் காட்டான் அரை ரூபாய் கொடுத்தால் போதும். பட்டிக்காட்டான் படிக்கா தவனுகையால் அவனுக்கு இந்தச் சலுகை. அதற்குச் சம்மதித்த பட்டிக் காட்டான் ஒரு விடு கதை போட்டான். "மூன்று கால் ஐந்து கையுள்ள மிருகம் எது?" படித்த மனிதர் சற்று யோசித்துவிட்டு "எனக்குத் தெரியாது; இந்தா ஒரு ரூபாய்" என்றார்.

ஒரு ரூபாயை வாங்கிக் கொண்ட பட்டிக்காட்டான் "எனக்கும் தெரி யாது. இந்தாருங்கள்" என்று அரை ரூபாயைத் திருப்பிக் கொடுத்து விட்டு அடுத்த ஸ்டேஷனில் இறங்கி விட்டான்.

# மெய்யும்.. பொய்யும்

கூடாலை




விமலாவின் புத்தகப் பையில் அரை குறையாக விட்டிருந்த பூ வேலையை முடித்து விடலாமென்று உட்கார்ந்தேன்.

“அம்மா! அம்மா!” என்று வெகு அவசரமாய் அழைத்துக் கொண்டே வந்தாள் வேலாயி. வெளியே வந்து பார்த்தபொழுது கையில் ஒரு பித்தளைக் குடத்துடன் காய் கறிகள் விற்கும் முனியனிடம் ஏதோ வாதாடிக் கொண்டிருந்தாள் அவள். நான் நிலைமை இன்ன தென்று யூகிக்கு முன்பே அவள் ஆரம்பித்து விட்டாள்.

“அம்மா! இவன் கற்ற வித்தையை என்னிடமே காட்ட ஆரம்பித்துவிட்டான். நம்ம வீட்டிலே திருடிய குடத்தை என்னிடமே கொண்டு வந்து விலைபேசி, ‘வித்துக் கொடு, அக்கா!’ என்றான். அவனுக்கு என்ன தைரியம் பாருங்கள்! இந்த வேலாயியிடமா அதெல்லாம் பலிக்கும்? அவனிடம் நயமாய்ப் பேசி இங்கு அழைத்து வந்து விட்டேன். இனி உங்கள் பாடு!” என்று பெரிதா யிரைத்தாள். இதற்குள் பக்கத்திலுள்ள ஐந்து வீட்டுக்காரர்களும் கூடிவிட்டார்கள்.

அவர்களும் முனியன் மேலிருந்த சந்தேகத்தை ஊர்ஜிதம் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். ஒரு பெரியவர் அருகிலிருந்த மேடைமேல் உட்கார்ந்து கொண்டு முனியனை விசாரணை செய்ய ஆரம்பித்தார். வேலாயி மற்றவர்களின் உத்தரவுப்படி முனியனின் தாயை அழைத்து வரப் புறப்பட்டாள். இவ்வளவுக்கும் நடுவில் அந்தச் சிறுவன் அழுதபடி நின்று கொண்டிருந்தான்.

முனியனுக்குச் சற்றேறக் குறையப் பதினான்கு வயதிருக்கலாம். அவனும் அவன் தாயும் எங்களுக்கெல்லாம் வழக்கமாய்க் காய்கறிகள் விலைக்குக் கொடுத்து வந்தார்கள்.

நான்கு மாதங்களுக்கு முன் எங்கள் வீட்டில் பித்தளைக் குடமொன்று காணாமற் போய்விட்டது. இரண்டொரு நாட்கள் அதைப் பற்றிப் பரபரப்பா யிருந்தது. அதன் பின் அது கிடைக்கா தென்று நிச்சயித்து விட்டோம். இவ்வளவு நாட்களுக்குப் பின் அந்தக் குடத்தைத் தான் தேடிக் கண்டு பிடித்துக் கொண்டு வந்துவிட்டதாய் வேலாயி ஆர்ப்பாட்டம் செய்தாள்.

காணாமற் போன குடம் திரும்பக் கிடைத்து விட்டதைக் கண்டு எனக்கும் சந்தோஷந்தான். ஆனால் மற்றவர்களே முனியனை விசாரித்துத் தீர்ப்புச் சொல்லட்டுமென்று பேசாமல் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன்.

இந்தச் சமயத்தில்தான் பள்ளியி லிருந்து விமலா வந்தாள். அப்பொழுது பெரியவர் முனியனைப் பார்த்து

உண்மையைச் சொல்லாவிட்டால் அவனைப் போலீஸில் ஒப்படைத்து விடப் போவதாய்ப் பயமுறுத்திக் கொண்டிருந்தார்.

"தாத்தா! கொஞ்சமிருங்கள்; நான் அவனைக் கேட்கிறேன்!" என்றாள் விமலா.

அங்கிருந்தவர்களெல்லாம் அவளைப் பார்த்து அலட்சியமாய் நகைத்தார்கள்.

"முனியா! நீ எங்கள் குடத்தை எடுத்தாயா?"

விமலாவின் கேள்விக்கு முனியன் தன் கண்களைத் துடைத்துக் கொண்டே பதில் சொன்னான்.

"இல்லே, பாப்பா! நான் உங்க குடத்தை எடுக்கவே இல்லே."

"பின்னே உனக்கு இது ஏது?"




"இது என் சின்னம்மாவுடையது. அவள் எங்களுக்கு இருபது ரூபாய் கடன் தரவேணும். அதைக்கேட்டதற்கு, 'இப்பொழுது கையிலே பணமில்லே. இந்தக் குடத்தைத் தரேன்; வித்து எடுத்துக்கோ!' என்று இதைத் தந்தாள்."

விமலா சற்று யோசித்துவிட்டு, "அப்படியானால் உன் சின்னம்மாவை இங்கு கூட்டி வந்து இதையெல்லாம் சொல்லிவிடச் சொல்லு! உன்னை யாரும் தொந்தரவு செய்ய மாட்டா" என்றாள்.

"தொலை தூரத்திலிருக்கும் அவளை அழைத்து வருவதானால் அதிகச் செலவாகுமே, பாப்பா! நான் என்ன செய்வேன்?" என்று அவன் விழித்தான். இந்தப் பதிலைக் கேட்ட மற்றவர்கள் தங்களுக்குள் சிரித்துக் கொண்டார்கள்.

கலங்கிய கண்களுடன் விமலா என்னிடம் வந்தாள். என் கழுத்தில் தன் கைகளைப் பிணைத்துக் கொண்டு, "அம்மா! முனியன் அந்தக் குடத்தைத் திருடவில்லையாம்!" என்றாள்.

"அவன் சொல்வதை நம்பாதே, விமலா! நம் குடம் காணமற்போன அன்று முனியன் இந்தப் பக்கமே சுற்றிக் கொண்டிருந்ததை வேலாயியும் இங்குள்ளவர்களும் பார்த்ததாய்ச் சொல்லுகிறார்களே!" என்றேன்.

"முனியன் பொய் சொல்ல மாட்டான் அம்மா!"

இதைக் கேட்டதும் எனக்குச் சிரிப்பு வந்தது. "இங்கிருப்பவர்களெல்லாம் மட்டும் பொய் சொல்வார்களா, விமலா?" என்றேன்.

உடனே அவள் என்னை விட்டு விலகி நின்றுகொண்டு என்னை ஆச்சரியத்துடன் பார்த்தாள். "அம்மா! நீ கூடவா இதை நம்பறே! முன்பு என் பள்ளிக்கூடத்தில் பார்க்காமலே எல்லோரும் சேர்ந்து பொய் சொல்லவில்லையா? அது உனக்கு மறந்து போச்சா?" என்று கேட்டாள்.

இதைக் கேட்டதும் நான் பேச்சற்றுப் போனேன்.

★

இரண்டு வருஷங்களுக்கு முன் நடந்த சம்பவம் அது. அப்பொழுது விமலாவுக்கு ஆறு வயது முடியவில்லை. குழந்தைகளின் சுபாவப்படி 'சாக்பீஸ்' என்றால் அவளுக்கு அசாத்திய மோகம். பள்ளியில் சேர்ந்து ஒரு மாதமாகவில்லை; அவள் தொலைத்துவிட்டு வந்த சாக்பீஸ்களும் பென்சில்களும் கணக்கிலடங்காது. ஒரு நாள் அவள் தந்தை அவளுக்கு நான்கு சாக்பீஸ்கள் வாங்கிக் கொடுத்தார். மறுநாள் அவள் பள்ளிக்குக் கிளம்பு முன் சாக்பீஸைத் தொலைத்துவிட வேண்டாமென்று எச்சரித்தனுப்பினேன். அன்று பகல் சாப்பாட்டிற்கு வரும்பொழுது விமலா விக்கி விக்கி அழுது கொண்டே வந்தாள். என்னவென்று கேட்டதற்கு, "அம்மா! பள்ளிக்கூடத்தில் எல்லோரும் பொய் சொல்றா; டீச்சர்கூடப் பொய் சொல்றா, அம்மா!" என்று தேம்பினாள். அவளைச் சமாதானம் செய்து விஷயங்களை அறிவது சிரமமாகி விட்டது.

விமலாவின் சாக்பீஸைக் கண்ட ஒரு சிறுமி அதைத் தனக்குத் தரும்படி கேட்ட

தாகவும், அதைக் கொடுக்க இவள் மறுத்ததும் அந்தப் பெண் இவள் வகுப்புச் சிறுமிகளுடன் ஏதோ ரகசியமாகச் சொல்லி விட்டு விமலாவைப் பார்த்து டீச்சர் வந்ததும் சொல்வதாய்ப் பயமுறுத்தியதாகவும், அதன் பின் டீச்சரிடம் அவள் ட்ராயரிலிருந்த சாக்பீஸ்களை விமலா திருட்டுத்தனமாய் எடுத்துக் கொண்டு விட்டாளென்று அவர்கள் சொன்னதாகவும், அதைக் கேட்டு அந்த அம்மாள் தீர விசாரியாமல், விமலாவிடமிருந்த சாக்பீஸ்களைப் பிடுங்கிக் கொண்டு, அவள் கைகளில் இரண்டடியும் கொடுத்தாளென்றும் சொன்னாள்.

“சாக்பீஸ் போனால்போகிறது! வேறு வாங்கிக் கொள்ளலாம்!” என்று நான் அவளைத் தேற்ற முயன்றேன். அதற்கவள், “அம்மா! இனிமேல் எனக்குச் சாக்பீஸே வேண்டாம். நாளை முதல் அந்தப் பொய்ப் பள்ளிக்கூடத்தை விட்டு வேறே பள்ளிக்கூடத்தில் சேர்த்து விடு, போதும்!” என்றாள்.

தூய்மையான இளம் உள்ளத்தைக் களங்கப்படுத்தி விட்டார்கள். இனி அவள் மேலிருக்கும் பழி நீங்கினால்தான் அவள் நிம்மதியடைவாள். இதை யறிந்ததும் விமலாவுடன் அவள் உபாத்தினியைக் காணச் சென்றேன்.

அந்த அம்மாள் என்னை வெகு அலட்சியமாகப் பார்த்தாள். அவளிடம் விமலா சொல்லியது அவ்வளவும் உண்மை தானென்று எவ்வளவோ எடுத்துச் சொல்லிப் பார்த்தேன். அவள் அதைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை.

“உங்கள் பெண் ஒருத்தி சொல்வது மட்டும் உண்மை என்கிறீர்கள்! என் வகுப்புச் சிறுமிகள் இவ்வளவு பேரும் பொய்யா சொல்வார்கள்?” என்று கேட்டாள். எனக்கும் இந்தக் கேள்வி புதுமையாகத்தானிருந்தது. எனக்கு வந்த ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு அந்தச் சிறுமிகளை நோக்கி, “விமலா சாக்பீஸை எடுத்ததை யார் பார்த்தது?” என்று கேட்டேன். அவர்கள் தங்கள் உபாத்தினியை ஒரு முறை பார்த்துக் கொண்டு ஏக மனதாய், “எல்லோரும் பார்த்தோம்” என்றார்கள். இதைக் கேட்டதும் பக்கத்திலிருந்த உபாத்தினிகள் என்னைப் பார்த்துக் குறும்பாக நகைத்தார்கள். எனக்கு ஒன்றும் புரியாமல் தலை சுற்றியது. நல்ல வேளையாய் அந்தச் சமயத்தில் தலைமை உபாத்தினி அங்கு வந்தாள். அவள் விஷயத்தை யறிந்ததும், முதல் நாள் வாங்கிய சாக்பீஸ்களைத் தன் ட்ராயரில் வைத்ததை மற்றவளுக்கு ஞாபகமூட்டிவிட்டு, அதை எடுத்து வந்து காட்டினாள். இதை யறிந்ததும் விமலாவின் உபாத்தினி அயர்ந்து போனாள். அப்பொழுதுதான் எனக்கும் சரியாக மூச்சு வந்தது. தலைமை உபாத்தினி நடந்ததற்காக வருந்துவதாகவும், தன்னை மன்னிக்கும்படியும் என்னைக் கேட்டுக் கொண்டாள்.

இவ்வளவு நேரம் சோர்ந்த முகத்துடன் ஒரு மூலையில் நின்றபடி எல்லாவற்றையும் கவனித்து வந்த விமலா, ஓடி வந்து என்னைக் கட்டிக் கொண்டாள். நான் பிரமாதமான காரியத்தைச் சாதித்து விட்டதாக எண்ணி மிகவும் சந்தோஷப்பட்டாள்.



“என்னப்பா, பழம் நன்றாக இருக்குமோ?”
“என்ன அப்படிக் கேக்கிறீங்க? எங்கிட்ட பழம் வாங்கிட்டு போறவங்க மறு நாளைக்கு என்னைத் தேடிக்கிட்டு வருவாங்களே!”

“இந்த மாதிரி பழத்தை வாங்கிண்டு வந்திருக்கேளே, ஒரே புளிப்பா யிருக்கே. பழத்தைக் கொண்டுபோய்க் கடைக்காரனிடம் திருப்பிக் கொடுத்துவிட்டு வாங்கோ.”

“பழம் ஒரே புளிப்பா யிருக்கிறது, அப்பா.”
“நான் அப்பவே சொல்லலீங்களா? எங்கிட்ட பழம் வாங்கறவங்க மறு நாளைக்கு அவசியம் தேடிக்கிட்டு வருவாங்கன்னு!”

நான் அதிகம் பாராட்டாத இந்தச் சம்பவத்தை இன்றளவும் விமலா மறக்கவில்லை. விமலா என் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு நடப்பவள்தான். ஒரே வார்த்தையில் அவளை என்னால் அடக்கிவிட முடியும். ஆனால், "அம்மா! நீ கூடவா இதை நம்புகிறே!" என்று அவள் கேட்ட கேள்வி என் காதுகளில் ஒலித்துக் கொண்டேயிருந்தது.

வெளிப்புறம் நோக்கினேன். முனியன் பக்கத்தில் வாடிய முகத்துடன் விமலா நின்று கொண்டிருந்தாள். இருவருடைய கன்னங்களிலும் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.

முனியன் குடத்தை எடுத்ததை நான் கண்ணால் பார்க்கவில்லை. மற்றவர்களின் சந்தேகத்தின்மேல் இவ்வளவு நேரமாய் அந்தச் சிறுவனின் மனத்தை நோகவைத்து வேடிக்கை பார்க்கும் என் கல் மனத்திற்கும், விமலாவின் கருணை நிறைந்த உள்ளத்திற்கும் எவ்வளவு வித்தியாசம்?

கடைசியில், "முனியனின் தாயை எங்கு தேடியும் காணவில்லை!" என்று கூவிக் கொண்டே வந்து சேர்ந்தாள் வேலாயி.

"போகட்டும், வேலாயி! அந்தக் குடத்தை இப்படிக் கொண்டு வா, பார்க்கலாம்!" என்றேன்.

உடனே வேலாயி சுற்றியிருந்தவர்களைக் கர்வத்தோடு ஒரு முறை பார்த்து விட்டு முனியனைப் பார்த்து, "வாடா, அம்மா காலிலே விழுந்து மன்னிப்புக் கேளு!" என்று சொல்லிக் கொண்டே குடத்தை எடுத்து வந்தாள்.

இதற்குள் விமலா என் அருகே வந்து ஈனஸ்வரத்தில், "அம்மா!" என்று அழைத்தாள். அந்த அழைப்பிலே ஏக்கம் நிறைந்திருந்தது.

"என்ன கண்ணு, சொல்லு!" என்றேன்.

"முனியன் நம்ம குடத்தை எடுத்திருக்க மாட்டான், அம்மா!"

"ஆம், விமலா! அவன் எடுத்திருக்க மாட்டான்!" என்றேன்.

வேலாயி ஏளனமாய்ச் சிரித்தாள். "வேலாயி! இது நம் குடம்போலில்லை. அவனிடம் கொடுத்துவிடு!" என்றேன்.

"என்ன, அம்மா! உலகம் அறியாத குழந்தை பேச்சைக் கேட்டு இப்படிச் சொல்லலாமா?"

"விமலாவுக்கு இந்த உலகம் தெரியவே வேண்டாம்! எனக்குத் தெரிந்திருப்பது போதும்; இந்தக் குடம் என்னுடையதில்லை!" என்றேன்.

வேலாயி என்னை வெறித்துப் பார்த்தாள்.

இனி அவளிடம் வாதுக்கு நிற்பதில் பயனில்லை என்று நானே முனியனிடம் குடத்தை எடுத்துக் கொடுத்துவிட்டேன். அவன் முகம் பிரகாசமடைந்தது!

"நாளை முதல் கட்டாயம் காய்கள் விற்க இங்கு வர வேண்டும்!" என்று விமலா அவனிடம் வாக்குறுதி வாங்கிக் கொண்டாள்!

வேலாயியும் மற்றவர்களும் என்னைப் பற்றி அசடாகவோ முட்டாளாகவோ மதித்துவிட்டுப் போகட்டும்; அதற்கு நான் வருந்தவில்லை.

இந்தக் குடம் போனால் வேறொன்று விலை கொடுத்து வாங்கிவிடலாம். உள்ளத்தைப் போல் அது அரிய வஸ்துவல்லவே!



## பண்பட்ட பண்ணையார் (ஒரு திருத்தம்)

டாக்டர் ராஜன் அவர்களுடைய விவசாயப் பண்ணையைப் பார்த்துவிட்டு வந்த பரவசத்தோடு, அதைப் பற்றிச் "சாவி" எழுதிய கட்டுரையில் ஒரு தவறு சேர்ந்து விட்டது பற்றி வருந்துகிறோம். மேற்படி விவசாயப் பண்ணையின் மூலம் டாக்டர் ராஜன் அவர்களுக்கு ஒன்றரை லட்சம் ரூபாய் வருமானம் கிடைத்திருப்பதாகக் கண்டிருக்கிறது. "ஒன்றரை லட்சம்" என்ற தொகையை டாக்டர் ராஜன் குறிப்பிட்டது என்னமோ உண்மைதான். ஆனால் அதை வருமானம் என்று குறிப்பிட வில்லை. அவருடைய விவசாயப் பண்ணையின் பெறுமானம் தற்சமயம் ஒன்றரை லட்சத்துக்கு மேல் உயர்ந்திருக்கிறது என்றுதான் கூறினார். மேற்படி தவறு சேர்ந்ததற்காக வருந்துகிறோம்.

# வெஜிடபில் கதம்ப ஊறுகாய்




வெள்ளரிக்காய், இஞ்சி, பாவக்காய், கீரைத்தண்டு, வாழைத் தண்டு, கத்தரிக்காய், பச்சை மிளகாய், பச்சை மிளகு — சொல்லும்போதே வாயில் ஜலம் ஊறுகிறது — முதலியவை சேர்த்து கைபடாமல் ஜிஞ்ஜாமிருதமாகத் தயாரிக்கப்பட்டது. வாய்க்கு வெகு ஜோர். உடம்பிற்கு பரம சுகம். இன்றே உங்கள் தேவைக்கு எழுதவும். இரு சைஸ்களில் கிடைக்கும்.

●

தயாரிப்பவர்கள் :

## டி. எஸ். ஆர். & கோ.

**வாஸனை திரவிய வியாபாரிகள்**

**கும்பகோணம்**

மதராஸ் விடி ஏஜென்டுகள் :

**மெஸர்ஸ். புஷ்பவனம் ஸ்டோர்ஸ்**

பைக்ராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி

ஸ்டாக்கிஸ்டு :

**B. பாலபட்டாபி,**

வைசியாள் தெரு, கோயமுத்தூர்.



நல்ல நிறைந்த கூந்தலே முகத்தின் அழகை எடுத்துக் காட்டுவது. கூந்தலே முக அழகை ஆக்குவதும், அழிப்பதும். கூந்தலழகையும் முக அழகையும் இன்றே கேசவர்த்தினியைக் கொண்டு விருத்தி செய்யுங்கள்.

அற்ப கேசத்தைவிட அழகுக்கு ஹானி வேறில்லை. இதைப் பரிஹரிக்கக் கேசவர்த்தினியைவிடச் சிறந்த மருந்துமில்லை. இழந்த கூந்தலையும் இளமையையும் கேசவர்த்தினியைக் கொண்டு இன்றே பெறுங்கள்.

அழகுள்ளவர் ஒரு சிலரே. ஆனால் கூந்தலழகையோ கேசவர்த்தினி உபயோகத்தால் ஒவ்வொருவரும் பெறலாம். கேச சம்பத்து படைத்தவர் அதை இழக்காமல் கேசவர்த்தினி கொண்டு காப்பாற்றுங்கள். படைக்காதவர் கேசவர்த்தினியால் அதை அடையுங்கள்.

# கேசவர்த்தினி

**கூந்தலைப் பாதுகாப்பது, விருத்தி செய்வது, அழகு படுத்துவது**

## விலை அணா 12

(மேற் செலவு வேறு)

**எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்**

போலிகளை வாங்கி மோசம் போகாதீர்கள் "கேசவர்த்தினி, தென்னிந்திய ரஸாயனசாலை" என்ற பெயர்களைக் கவனித்து வாங்குங்கள்

தயாரிப்பவர் :

## தென் இந்திய ரஸாயன சாலை

**ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்**

# மூவர் முடிவு

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

வனம் போவதற்கு யுதிஷ்டிரனுடைய அனுமதி பெற்றதும் திருதராஷ்டிரனும் காந்தாரியும் தங்களுடைய மாளிகைக்குச் சென்று உபவாசம் தீர்த்துக் கொண்டார்கள். காந்தாரியும் குந்தியும் சேர்ந்தாற் போல் உட்கார்ந்து போஜனம் செய்தார்கள். திருதராஷ்டிரன் தன் பக்கத்தில் யுதிஷ்டிரனை உட்கார வைத்துக் கொண்டு ஆசி மொழிகள் சொன்னான். அதன்மேல் காந்தாரியின் தோளின் மேல் கை வைத்து ஊன்றிக் கொண்டு நடந்து கிழவன் வனம் நோக்கிப் புறப்பட்டான். புருஷனுக்குக் கண்ணில்லை என்று தானும் தன் முகத்தைத் துணியால் கட்டிக் கொண்டு கண்களை உபயோகப் படுத்தாமல்; விரத வாழ்க்கை நடத்திவந்த காந்தாரி குந்தியின் தோள் மேல் தன் கையை வைத்துக் கொண்டு நடந்தாள். மூவரும் ராஜதானியை விட்டு வனம் சென்றார்கள். காந்தாரிக்குச் சிசுருஷை செய்யத் தானும் வனத்திலே இருப்பதாகக் குந்தி தன் மனதில் நிச்சயித்துக் கொண்டு சென்றாள். போகும்போது யுதிஷ்டிரனுக்குச் சொன்னாள். "மகனே! சகதேவன் மீது ஒரு போதும் கோபித்துக் கொள்ளாதே! யுத்தத்தில் வீர மரணம் அடைந்த கர்ணனை எப்போதும் அன்புடன் நினைப்பாயாக! அவன் என் மகன். உங்கள் சகோதரன் என்பதை நான் உங்களுக்குச் சொல்லாமல் போனது என் குற்றம். திரௌபதியைப் பிரியமாகப் பார்த்துக் கொள்ளுங்கள். பீமனும் அர்ச்சுனனும் நகுலனும் ஒரு போதும் துக்கப் படாமல் பார்த்துக் கொள். குலத்தின் பாரம் இனி உன்னுடையதுதான்" என்றாள்.

காந்தாரியை வழி யனுப்பத்தான் குந்தி சென்றாள் என்று அதுவரையில் எண்ணிக் கொண்டிருந்த தருமபுத்திரன் ஒரு முகூர்த்த நேரம் ஒன்றும் சொல்லத் தெரியாமல் திகைத்தான். பிறகு, 'அன்னையே! இது வேண்டாம். எங்களை ஆசீர்வதித்து யுத்தத்துக்கு அனுப்பினாய்! இப்போது எங்களை விட்டு விட்டு நீ வனம் போவது தருமம் அல்ல" என்று யுதிஷ்டிரன் தாயை வருந்திக் கேட்டுக் கொண்டான். ஆனால் குந்தி வனம் செல்வதாக நிச்சயித்து விட்டு உறுதியாக நின்றாள்.

"என் பர்த்தா இருக்கும் உலகத்துக்குப் போக நான் விரும்புகிறேன். காந்தாரியுடன் வனத்தில் வசித்துத் தவம் செய்து நான் உங்கள் தகப்பனாரைச் சேருவேன். நீ திரும்பிச் செல். நகரத்துக்குப் போ. உன் புத்தி எப்போதும் தருமத்தில் நிலைத்து நிற்கட்டும்" என்று மகனை ஆசீர்வதித்தாள்.

* * *

யுதிஷ்டிரன் பேச்சில்லாமல் நின்றான். அவனையும் மற்ற புத்திரர்களையும் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே குந்தி வனம் சென்றாள்.

ஒருவர் தோள்மேல் ஒருவர் கைவைத்து ஊன்றிக் கொண்டு அந்த மூன்று விருத்தர்களும் வனம் போன இந்தச் சித்திரம் நேற்று நம் வீட்டில் நடந்த ஒரு சோக நிகழ்ச்சிபோ லிருக்கிறது.

* * *

மூன்று வருஷங்கள் திருதராஷ்டிரனும் காந்தாரியும் குந்தியும் வனத்தில் கழித்தார்கள். பிறகு ஒரு நாள் திருதராஷ்டிரன் ஸ்நானம் செய்து விட்டு ஆசிரமத்துக்குச் சென்றான். அப்போது காடு தீப்பற்றிக் கொண்டது. காற்றடித்து வனம் முழுவதும் நெருப்பு பரவிற்று. மான்களும் காட்டுப் பன்றிகளும் கூட்டம் கூட்டமாக ஓடித் தடாகத்தை அடைந்தன. கூட இருந்த சஞ்சயனை நோக்கி, "நீ இந்த அக்கினியினின்று ஓடித் தப்புவாயாக!" என்று சொல்லிவிட்டுக் கண்ணில்லாத கிழ அரசனும் கண்ணை வஸ்திரத்தால் கட்டி மறைத்துக் கொண்டிருந்த காந்தாரியும் குந்திதேவியும் கிழக்கு முகமாக உட்கார்ந்து கொண்டு யோக நிலையில் அமர்ந்து நெருப்புக்கு இரையானார்கள். திருதராஷ்டிரன் மறைந்ததும் அவனுக்குக் கண்ணும் உயிருமாயிருந்த சஞ்சயன் துறவு பூண்டு இமயமலை சென்றான்.

# வேண்டாத மாமியார்

கு. கணபதி

நேற்று என் அத்தையைப் பார்க்கப் போயிருந்தேன். அவள் சொன்ன கதையைக் கேளுங்கள் :—

அந்த நாளில் என்னை அதிருஷ்டக்காரி என்று சொல்லுவார்கள். 'ஒரு பெண்ணாக'ப் பிறந்தேன். அருமையாக வளர்ந்தேன் பத்து வயது வரையில். பிறகு அம்மா எமலோகம் சென்றாள். சித்தி வந்தாள். 'சக்களத்திப் பெண்ணாக' அவதிப்பட்டேன். காலா காலத்தில் கல்யாணம் நடந்தது. என் கணவருக்குப் 'பிரிய மனைவி'யானேன். அவர் அம்மாவுக்கு 'ஆகாத மாட்டுப் பெண்ணானேன்.' என் அருமைக் குழந்தைகளுக்கு 'அம்மா' வானேன். அவனுக்குக் கல்யாணமானதும் அவன் மனைவிக்குப் 'பொல்லாத மாமியாரானேன்'. அன்று அருமையாகப் பிறந்து வளர்ந்த அவளேதான் நான் இன்றும். ஆனால், இதற்கிடையில் எத்தனை பெயர்கள்! பெயருக்கேற்றபடி அனுபவத்தில் எத்தனை மாறுதல்! இதற்குப் பின்பும் பெயரில் என்ன இருக்கிறது என்று சொன்னால் பெயரில்தான் எல்லாம் இருக்கிறது என்று சொல்வேன்.

பெண்ணாய்ப் பிறந்து விட்டால் அவளவள் மனதில் இன்பக் கனவுகள் காணாத காலம் ஏது? ஆயிரம் ஆயிரமாக மனக் கோட்டை கட்டாத நாள் ஏது? பருவ காலம் வந்த பிறகு தனக்கு வரப்போகும் கணவனைப் பற்றி; பிறகு தனக்குப் பிறக்கப்போகும் குழந்தைகளைப் பற்றி; குழந்தைகள் வளர்ந்ததும், தனக்கு வரப் போகும் மாப்பிள்ளை மாட்டுப் பெண்ணைப் பற்றி; இவைகளையெல்லாம் சிந்திக்காத ஸ்திரீ யாராவது உண்டா?

நானும் எத்தனையோ கனவு கண்டேன். கணவன் கிடைத்த வரையில் அதிர்ஷ்டக்காரிதான். காலா காலத்தில் குழந்தைகளும் பிறந்தன. சுமதியைப் பற்றிய வரையில் என் கனவு நனவாய் விட்டது. மாப்பிள்ளை கண்ணுக்கு லட்சணமாய் யோக்கியமானவன். நல்ல இடம். ஏதோ கௌரவமாகக் காலம் தள்ளுகிறார்கள்.

மற்றக் கனவெல்லாம் என் மாட்டுப் பெண்ணைப் பற்றியேதான். அழகான பெண்களைக் கண்டால் என் நினைவெல்லாம் அவர்களைச் சுற்றியே வட்டமிடும். 'அவரி'டம்கூட அதைப் பற்றியே பேசுவேன், என் மாட்டுப் பெண் எப்படி இருக்க வேண்டுமென்று. "இதெல்லாம் நானும் நீயும் நினைக்கிறபடி முடியுமா? அவனவன் கொடுத்து வைத்தபடியேதான் கிடைக்கும்" என்பார்.

ஏதோ பேசிக் கொண்டிருக்கும்போது அடுத்த வீட்டுச் சாரதா சொன்னாள்: "'மாட்டுப் பெண், மாட்டுப் பெண்'— என்று ஆசை கிடந்து அடித்துக் கொள்ளுகிறது உனக்கு. அவள் வந்து இரண்டு இடி இடிச்சாளானால் அப்புறம் தெரியும். அதுவரையில்........."

"ஏண்டி இடிப்பாள் என்னை? அவளை நடத்துகிறபடி நடத்தினால் தகராறு எதுக்கு? என் பெண்ணைப் போலவே அருமையாக வைத்திருக்க மாட்டேனா? அப்படியுங்கூட அவளுக்கு என்னைப் பிடிக்கலே என்று மேலே கீழே பார்த்தால் அவள் மட்டில் இருந்து விட்டுப் போகிறாள். இருந்தாலும், எனக்கென்னமோ அப்படியெல்லாம் வராது என்கிறதுதான்!"

"இப்படிச் சொன்னவா ரொம்பப் பேரை நானும் பார்த்துவிட்டேன்!"

நானுங்கூட இந்தப் பிரச்னையைப்பற்றி எத்தனையோ தடவை அலசி அலசி யோசிக்கிறதுண்டு. கொஞ்ச நாளைக்காவது நானும் ஒரு மாமியாரிடம் இருந்தவள்தானே? பெற்ற பெண்ணிடம் மட்டும் பரஸ்பரம் வாஞ்சையாக இல்லையா? அதைப் போலவே மருமகளையும் அருமையாக வைத்திருப்பேன். ஆதரவோடு பராமரிப்பேன். பாராட்டுவேன். சீராட்டுவேன். குற்றங் குறை சொல்லவே மாட்டேன். அவனும் அவளும் ஆனந்தமாக இருப்பதைக் கண்குளிரக் கண்டு மனம் பூரிப்பேன் என்றெல்லாம் நினைப்பேன்.

எங்கெங்கோ பார்த்துவிட்டுக் கடைசியில் லக்ஷ்மி வந்தாள். பெயருக்கேற்ற உருவம். அன்று அவனையும் அவளையும் மணப்பந்தலில் பார்த்தபோது மயிர்க்கூச்செறிட்டு, ஆனந்தபாஷ்பம் சொரிந்தேன். அதைப்பற்றிக் கூட யாரோ சொன்னாளாம், நான் தனியாக அரசாண்ட இடத்தில் இன்னொருத்தி வந்து விட்டாளே என்று ஆத்திரப் பட்டு அழுகிறேனென்று. சொல்லி விட்டுப் போகட்டும்.

லக்ஷ்மி வீட்டுக்கு வந்தாள். வந்ததும் வராததுமாக அவளும் வேலை செய்ய

வேண்டுமா? சிறிசுதானே? கொஞ்ச நாளைக்காவது இஷ்டம்போல் இருக்கட்டுமே! இத்தனை நாளாக நானே வீட்டுக் காரியங்களைப் பார்த்துக் கொள்ளவில்லையா? அவளாக வரட்டும் என்று இருந்து விட்டேன். அவன் வருகிற வேளைக்கு வருவாள். அவனுக்குப் பரிமாறுவாள். தானும் சாப்பிடுவாள். சாப்பிடும்போதே, "இது என்ன காப்பி? இது என்ன சமையல்?" என்று உதட்டைப் பிதுக்குவதும் கழுத்தைத் திருப்புவதுமாக இருப்பாள். நான் கவனிக்காததுபோல் இருந்து விடுவேன். பிறகு மற்றவர்கள் சாப்பிட்டார்களோ இல்லையோ—அக்கறையில்லை: அதைக் காணமுடியாது.

ஒருநாள் "இப்படியெல்லாம் இருக்கக் கூடாதடி, அம்மா! நீ காரியம் செய்து தான் எனக்கு ஆகணும் என்கிறதில்லை. உன் குடும்பம், குடித்தனம் என்ற பொறுப்பு வந்ததும், நீதான் செய்யப் போகிறாய். இருந்தாலும் நாமெல்லாம் புருஷாளுக்கு முன்னே எழுந்திருந்து, ஸ்நானம் பண்ணிவிட்டு லக்ஷ்மிகரமாக ஏத்திக் கிட்டு, அடுப்பைப் பற்ற வைத்து ஆகவேண்டிய காரியங்களைக் கவனிக்கணும் என்று பெரியவா சொல்லுவா!" என்றேன். பதிலே இல்லை. காதிலே வாங்கிக் கொண்டதாகக்கூடத் தெரியவில்லை. போய்விட்டாள் அறைக் குள்ளே. அன்றிரவு "உங்கள் அம்மாவுக்கு வேலை செய்ய ஆள் வேண்டியிருந்தால் ஒரு சமையல்காரியை வைத்துக் கொண்டிருக்கலாமே! என்னைக் கல்யாணம் செய்திருக்க வேண்டியதில்லையே!" என்று அவள் அவனிடம் சொல்வது காதில் விழுந்தது.

மறுநாள் காலை அவன் என்னிடம் வந்து, "உனக்கு வேலை செய்ய முடியாவிட்டால் ஒரு சமையற்காரியை வைத்துக் கொள்வது தானே? அவளை எதற்கு......?" என்று ஆரம்பித்தான். அவன் பயலுக்கு இதுவரையில் என்னிடம் எதிர்த்து வார்த்தையாடினது கிடையாது. காலம் மாறிவிட்டது என்று நினைத்துக் கொண்டு, "சரி, அப்பா!" என்று சொன்னேன். இவன் சம்பாத்தியத்தில் சமையற்காரி வேறு? அவர் பென்ஷன் வராவிட்டால் தெரியும்.

அடுத்த நாள் அவளாகவே வந்து சமையலறையில் ஏதோ காரியம் செய்வதுபோல இப்படி அப்படி நின்றாள். பிறகு ஏதோ சமைத்தாள். குழந்தைகள் விளையாடுவதைப் போல ஒரு நாளைக்கு உப்பைக் கொட்டியிருந்தாள். மறுநாள் மிளகாயை விளாசியிருந்தாள். இன்னொரு நாளைக்கு உப்பே இல்லை! படித்த பெண்ணாம்! என்ன படிப்பு படித்ததுகளோ! சினிமாக் காரியாட்டமா உடுத்திக்கொண்டு ஒன்றரை அங்குலம் மாவை மூகத்தில் அப்பிக்கொண்டு, 'ஹிஹிஹி' என்று பல்லை இளிக்கிறதும், பெரியவா, சின்னவா என்கிற மரியாதையில்லாமல் பேசுவதற்குந்தான் கற்றுக் கொண்டிருக்கிறதுகள்! படித்த பெண்களுக்கு ஒரு நாளைக்குச் சொல்லிக் கொடுத்தால் நிதானம் தெரியாதோ? அவன் வரையில் ஒரு வார்த்தை சொல்லாமல் சாப்பிட்டு விட்டுப் போய் விடுவான். நான் அதைப்போல் சமைத்திருந்தால்......?

என் சின்னக் குழந்தைகள் பாலு, ருக்கு இவர்களெல்லாம், "மன்னி! ஒரு கதை சொல்லு; மன்னி! எனக்குப் பாடம் சொல்லிக் கொடு; எனக்குத் தலை வாரி விடு!" என்று கெஞ்சுவார்கள். சிறிசுகள் தானே! ஊஹூம், ஏதாவது சாக்குச் சொல்லி விரட்டிவிடுவாள். அவர்களுக்குச் சாப்பாடு போடுவதற்குக்கூடப் பிரமாதமாக அலுத்துக் கொள்வாள்.

அன்றைக்குக் கோடிவீட்டுக் கோமதியிடம் சொல்லிக்கொண்டு இருந்தாள்: "எங்கள் வீடு பெரிய அன்ன சத்திரம். அவர் ஒருவர் உழைக்க ஊரிலே இருக்கிறதெல்லாம் சாப்பிடறதுகள்!" என்று. யார் அப்படி கணக்கு வழக்கு இல்லாமல் இருக்கிறார்கள்? வேறு யாருமில்லை. என் பேரன் கமலியின் பின்னே இருக்கிறான்.



சலவைக்குப் போடுவதற்கு முன்னும்




சலவைக்குப் போய் வந்த பிறகு!

இன்னொரு பிள்ளை, 'அவருக்கு' மாமா - பேரன். நன்றாக இருந்த குடும்பம். அந்த நாளில் இவருக்கு எவ்வளவோ உதவி ஒத்தாசை செய்தார்களாம். இப்பொழுது கொஞ்சம் நொடிக்கப் போச்சு. அவா ஊரிலே பள்ளிக்கூடம் இல்லையென்று இங்கே வந்திருக்கிறான்.

இன்னொரு நாள் அலமேலுவிடம் சொல்லிக் கொண்டிருந்தான்: "இந்த வீட்டிற்கு வந்த நாளாக மாடு மாதிரி உழைக்கிறேன். அலுத்துச் சலித்து அரை நிமிஷம் உட்கார நேரமில்லாமல்......!" என்று. என்ன செய்கிறாளாம் அப்படி? நான் செய்யாத காரியமா? இதுகளுக்குத் தகுந்தாற்போல மிஷினும் வந்திருக்கிறது. அரைப்படி, கால்படி மா அரைக்கிறதாயிருந்தாலும் அதிலே அரைத்து விடுகிறோம். அப்பளாம் நான் இடுகிறேன். இட்டிலிக்கு மாவரைக்கிறதெல்லாம் இப்பொழுதும் நான்தான். கறிகாய் நறுக்குகிறது, அது இது என்று எடுபிடி வேலையெல்லாம் நான்தான் செய்கிறேன். அடுப்பிலே ஏற்றி இறக்குகிறதற்குள்ளே இந்தப் பாடு படுகிறாள். அவனும் அதற்குத் தகுந்தாற்போல் உருகுகிறான்—தன் பெண்டாட்டி உழைத்து உழைத்துத் துரும்பாய் விட்டாள் என்று. அந்த நாளிலே நான் ஒண்டிதானே! என் குழந்தைகளையும் பார்த்துக் கொண்டு—எத்தனை பெரிய குடும்பம்—மாமியார், நாத்தனார், மைத்துனன் நாலுபேர். வீட்டில் குழாயும் கிடையாது. விடிந்ததும் விடியாததுமாக ஆற்றுக்குப் போய் ஸ்நானம் பண்ணிவிட்டு ஜலம் கொண்டு வருவேன். இவன் பெரியவனான பிறகு கூட "ஐயோ! இத்தனை வேலை செய்கிறாயே?" என்று கேட்பானா? ஊஹூம்.

இன்னொரு சின்ன விஷயம். அவனுக்கு நேரா நேரம் தெரியாது. அடுப்பங்கரையாயிருந்தாலும் கொல்லைப் பக்கமாயிருந்தாலும் அவளைத் தீண்டுவான். புருஷர்களெல்லாருமே அப்படித்தான்! ஆனால், யாராவது பார்த்தால் என்ன சொல்லுவார்கள்? நமக்கல்லவா வெட்கம் இருக்க வேண்டும்? இதுக்கெல்லாம் இடம், நேரம் கிடையாதோ? மடி கிடி ஒன்றுதான் கிடையாது இந்த நாளிலே! வந்த புதுசிலே ஒரு மாதிரி இருந்தான். பிறகு நாலு பேராகக் கூடிக் கொண்டு கதை பேசிக் கொண்டு கொம்மாளம் அடிக்கிறது. ஏதுடா, வீட்டிலே பெரியவா இருக்காளே என்று அடக்கம், ஒடுக்கம், மரியாதை, மட்டு என்கிறது கொஞ்சங்கூடக் கிடையாது. எதிர் வீட்டில் இருக்கிறாளே உஷா, அவள் ரொம்ப நாகரிக்காரி என்று அவன் மனதில் எண்ணம். நாலு பேருக்கு நடுவிலே போய்ப் பாடுகிறதும், பேசுகிறதுமாக இருப்பாள். அவளை அழைத்து வைத்துக் கொண்டு கதை பேசுகிறான். அதுவும் என்ன கதை? அவன் கூத்தடிக்கிற பிரதாபந்தான்! அவளிடம் சொல்லுகிறான் ஒரு நாள்: "நீ கொடுத்து வைத்தவள்! மாமியார், நாத்தனார் என்று ஒரு தண்டா கிடையாது. குஷியாய் இருக்கிறாய்! என்னைப் போலவா?" என்று.

கதையைக் கேளு! இவன் குஷியாக இருக்கிறதை நானும் அவருமாகக் கெடுத்து விடுகிறோமாம். ஆயுசு முடிந்தால் தொலைகிறோம். அதுவரையில்...? அப்படியுந்தான் அவளை என்ன செய்கிறோம்? ஏதாவது ஒரு நாளைக்கு அப்படிச் செய்யாதே, இப்படி நடக்காதே, நாலு பேர் என்ன சொல்லுவா என்று எல்லாம் அவன் நன்மைக்குத்தானே சொல்லுகிறோம்?

சீமதிக்கு மன்னியின்மேல் ரொம்பவும் பிரியம். இங்கே வந்து சந்தோஷமாக எல்லோருடனும் நாலு நாள் இருந்துவிட்டுப் போகலாம் என்று அவள் அண்ணாவுக்குக் கடிதம் எழுதுவாள். மறுநாளே லக்ஷ்மி தன் பிறந்தகத்திற்குப் போய்விடுவாள். தப்பித் தவறி எப்போதாவது முன்கூட்டியே சொல்லாமல் வந்துவிட்டால், அவ்வளவுதான். தலை வலி நெஞ்சு வலி என்று படுத்துவிடுவாள்.

இந்தக் காலத்துப் பெண்களுக்கு—அதிலும் லக்ஷ்மிக்குத் தலைவலி வராத நாளே கிடையாது. அதைத் தவிர ஒரு நாளைக்கு டான்சில் ஸாம், இன்னொரு நாளைக்கு இன்னொன்று — அந்தப் பேரெல்லாம் யாருக்குத் தெரிகிறது! உடனே டாக்டர் சாரி வருவார். அல்லது டாக்டர் வனிதா வருவாள். நாலு நாளைக்கு ஒரு மருந்து. மாதக் கடைசியில் பெரிய 'பில்'. இதுகளுக்குத் தகுந்தாற் போல டாக்டர்களும் வருகிறார்களே! அவர்கள் "ரொம்ப பலஹீனமாக இருக்கிறது. டானிக் சாப்பிட வேண்டும். ரெஸ்ட் எடுத்துக்கொள்ள வேண்டும்!" என்கிறார்கள். நல்ல டானிக்; நல்ல ரெஸ்ட்டு! எங்கிருந்து வந்ததோ இவர்களுக்குப் பலஹீனம்! சாதாரண காலத்திலேயே இப்படி; குழந்தை பிறந்து விட்டாலோ கேட்க வேண்டியதில்லை. படுத்த படுக்கைதான். டாக்டர், மருந்து, டானிக் இத்யாதி. ஐந்து மாதம் வரையில் இப்படி என் பிராணனை வாங்குவாள்!

பிறகு பிறந்தகத்திற்குப் போனால் குழந்தை பிறந்து ஐந்து மாதம் கழித்துத்

தான் திரும்புவான். இதற்குள் ஐம்பது தடவை இவன் போய் விட்டு வருவான், சும்மாவா! ஒவ்வொரு தடவையும் அது இது என்று ஏதாவது அவனுக்கு வாங்கிக் கொண்டுதான் போவான். அவன் போவதும் சரி, வருவதும் சரி, எனக்கோ அவனுக்கோ ஒன்றும் தெரியாது. தானே ராஜா, மந்திரி, பிரதானி எல்லாம் என்ற கதைதான். அதற்கேற்றாற்போல அவனும் ஆடுவான். தப்பித் தவறி ஒரு வார்த்தை நான் சொல்லி விட்டால் "வேளா வேளைக்குக் கொட்டிக் கொண்டு ஒரு மூலையில் விழுந்துகிடக்காமல் நான், நான் என்று எதற்கும் முன்னாடி வந்து விடுகிறது! இதை யெல்லாம் யார் கேட்டா?" என்று அவன் ஆரம்பித்து விடுவான். தலையிலே எழுத்து. பிள்ளை வேணும் நாட்டுப் பெண் வரணும், நாமும் நம் குடும்பமும் சந்தோஷமாக இருக்கணும் என்றெல்லாம் என்னென்னவோ கனவு கண்டதற்கு இதுதான் பலன். இதற்கு நான் பண்ணின பாவந்தான் என்ன? அவனுக்குத் தாயாக இருப்பதுதானே? எனக்கு ஏன் இன்னும் காலம் வரவில்லை?"— என்று தன்னைத் தானே நொந்து கொண்டாள் அத்தை.

அவள் கண்களிலிருந்து பொல பொலவென்று கண்ணீர் வழிந்தது. எனக்குத் தெரிந்த நாளாக அவளை இந்த மன நிலையில் நான் கண்டதே இல்லை. எப்பொழுதும் சிரித்த முகம். யாரிடமும் வாத்ஸல்யமான சுபாவம். அப்படி யிருந்தவள் இன்று இப்படிக் கண் கலங்குவானேன்? அவள் கற்பனைக் கோட்டை அடியோடு இடிந்து விழுவானேன்? அவள் வாழ்க்கையில் சந்தோஷமோ, சுகமோ கிடைக்கா விட்டாலும் சமாதானமாவது இருக்கக் கூடாதா? லக்ஷ்மி சின்னப் பெண். இவள் வாழ்க்கை முடியப் போகிறது. இவர்களுக்குள் தகராறு ஏன்? அவள் அவதிப்படுவதெல்லாம் மாமியார் என்ற பெயர் வந்ததினால்தானே? அந்தப் பெயருக்காகவா இவ்வளவு அவதி? அந்தப் பெயரினாலேயே "அவள் கொடுமைப் படுத்துவாள்!" என்று இரக்கமற்ற முறையில் உலகமும் அவளைத் தூற்ற வேண்டுமா?

# பிராப்தம் இருந்தது

பகீரதன்

சந்தானமய்யர் பெரிய பணக்காரர். அவருக்கு ஒரே பெண். அந்தப் பெண்ணைக் கலியாணம் செய்து கொள்பவனுக்கு அவருடைய சொத்தெல்லாம் சேரும்.

சந்தானமய்யரின் மைத்துனர் பிச்சுவய்யரின் ஒரே பிள்ளைதான் மணி. படிப்புக்கும் அவனுக்கும் வெகு தூரம். சீட்டாட்டத்திலும் சினிமாவிலுமே அவன் பொழுதைப் போக்கி விடுவான்.

ஆனாலும் பிச்சுவையர் எவ்வளவோ சிரமப்பட்டு மணியை பி. ஏ. பரீட்சையில் எழுத வைத்துவிட்டார். அந்த அருமையான பிள்ளைக்குச் சந்தானமய்யரின் பெண்ணைக் கலியாணம் செய்து வைத்துவிட வேண்டுமென்பது பிச்சுவையரின் ஆசை. அதற்காக அவர் சந்தானமய்யரை சதா நச்சரித்துக்கொண்டே இருந்தார். ஒரு பி. ஏ. பாஸ் பண்ணின ராஜு"வேட்"டுக்குத்தான் தன் பெண்ணைக் கொடுக்கவேண்டுமென்பது சந்தானமய்யரின் எண்ணம். பிச்சுவையரின் உபத்திரவம் தாங்க முடியாமல் சந்தானமய்யர் கடைசியாக, "அவன் பி. ஏ. தேறி விடட்டும்; உடனே கலியாணத்துக்கு ஏற்பாடு செய்து விடலாம்" என்று சொல்லிவிட்டார்.

பிச்சுவையருக்கும் பெருமை தாங்கவில்லை. தன் மகனை எப்படியாவது பி. ஏ. பாஸ் செய்யும்படி செய்துவிட வேண்டும் என்பதற்கு ரொம்பபாடு பட்டார். மகனைக் கூப்பிட்டு, "அப்பா, மணி! கொஞ்ச நாளைக்கு அந்தப் பாழாய்ப் போன சீட்டாட்டத்தையும் சினிமாவையும் மறந்து விட்டு, அக்கறையாகப் படித்து பி. ஏ. பாஸ் செய்துவிடேன்" என்று பயமாகக் கெஞ்சினார். பிள்ளையாண்டானும் "ஆகட்டும்" என்று தலையைப் பலமாக ஆட்டி வைத்தான்.

பரீட்சை முடிந்து முடிவும் பத்திரிகைகளில் வெளியாயிற்று. நல்ல வேளையாகப் பிச்சுவையரின் மகன் மணியின் நம்பரான 1029 அதில் காணப்பட்டது. பிச்சுவையரின் சந்தோஷத்திற்குக் கேட்க வேண்டுமா?

பிச்சுவையர் பத்திரிகையை எடுத்துக் கொண்டு, சந்தானமய்யரின் வீட்டுக்கு ஒரே ஓட்டமாய் ஓடினார். அவருக்கு முன்னாலேயே விஷயத்தைத் தெரிந்து கொண்ட சந்தானமய்யர் அவரைச் சந்தோஷத்துடன் வரவேற்று முகூர்த்தத்துக்கு ஏற்பாடு செய்தார்.

ஒரு வாரத்திற்கெல்லாம் தன்னுடைய வாக்கையும் நிறைவேற்றி வைத்தார். ஒரு நல்ல முகூர்த்தத்தில் சந்தானமய்யரின் பெண் ஜானகிக்கும் பிச்சுவையரின் மகன் மணிக்கும் விவாகம் நடந்தேறியது. உடனே சந்தானமய்யரின் சொத்துக்களுக்கும் மணி சொந்தக்காரனானான்.

கலியாணமாகிச் சில தினங்கள் சென்றன. ஒருநாள் சந்தானமய்யர் தன் மகளுடனும் மருமகனான மணியுடனும் எதைப் பற்றியோ பேசிக் கொண்டு அன்றைய தினசரியைப் புரட்டிக் கொண்டிருந்தார். அதில் வெளியாகி யிருந்த செய்தியைப் படித்தபோது அவரைத் தூக்கி வாரிப் போட்டது. அந்தச் செய்தி வருமாறு:—

ஒரு திருத்தம் சென்னை, ஏப். 25.

"சென்ற ஆறாந் தேதி இதழில் வெளியாகி இருந்த பி. ஏ. பரீட்சை முடிவில், 1092 என்னும் நம்பருக்குப் பதிலாக 1029 என்று பிரசுரமாகிவிட்டது. நேயர்கள் திருத்தி வாசித்துக் கொள்ளவும்."

# ஈ வேட்டை

சுந்தா

ஓய்வாக ஈஸிச்சேரில் சாய்ந்து கொண்டு, "ஏகாந்த இனிமை" என்ற புஸ்தகத்தைப் படிக்க ஆரம்பித்தேன். ஒரு பக்கம் படித்து முடிப்பதற்குள், துஷ்ட ஈ ஒன்று, "ஏகாந்த இனிமையா அனுபவிக்கிறாய்?" என்று கேட்டுக் கொண்டே வந்தது. ஜன்னல் வழியாக வந்த ஈ, முதலில் என்னை ஒரு தரம் பிரதட்சணம் செய்தது; அதுவும் வலமாகச் செய்யாமல், இடமாகச் செய்தது. "அட சனியனே, தொலை!" என்று "ஏகாந்த இனிமை"யைக் கொண்டு அதை விரட்டினேன். அந்த ஈ ஒரு பருந்துப் பாய்ச்சல் பாய்ந்து, மறுபடியும் மேலே எழும்பி, ஒரு பக்கமாய் விலகி மேஜைமேல் உட்கார்ந்தது. எப்படியும் தூரத்தில் இருந்தால் சரிதான் என்று, ஏகாந்த இனிமையை அனுபவிக்க ஆரம்பித்தேன். சாது வரி படித்திருக்க மாட்டேன்; கழுத்திலே நறு குறு என்றது. கையைக் கழுத்தருகே கொண்டு போவதற்குள், காதிலே கொய் என்று சத்தம் கேட்டது. தலையை ஒரு ஆட்டு ஆட்டினேன். காதைப் பிடித்த சனி மனத்தைப் பிடித்துக் கொண்டது. அவருக்கும் ஒரு விரட்டு விரட்டிவிட்டு, மறுபடியும் புஸ்தகத்தைப் பிரித்தேன். கொஞ்ச நேரம் அமைதி நிலவிற்று. அப்புறம், என்ன ஆச்சரியம் பாருங்கள்! என் மூக்கின் நுனியிலே ஜம்மென்று உட்கார்ந்தது. எனக்கு மூக்குக்கு மேலே கோபம் வந்து விட்டது. அந்த கோபத்தில், ரூல் தடியால் ஓங்கி அறையலாமா என்று தோன்றியது. ஆனால் அப்படிச் செய்தால், ஈ அடிபடுமோ படாதோ, மூக்கு உடைபடுவது நிச்சயமானதால், கையாலேயே வீசி விரட்டினேன்.

இனி இந்தச் சத்துருவை அதன் போக்கிலேயே கொஞ்சம் விட்டு வைத்து, அது வசதியான இடமொன்றில் உட்காரும் சமயம் பார்த்து, ஒரே அடியில் தீர்த்துக் கட்டவேண்டும் என்று திட்டம் போட்டு, தன்படியே ஆயத்தமாய் இருந்தேன். இதற்குள் என் சூழ்ச்சி தெரிந்து விட்டது போலும். என்ன செய்வது, என் கை எட்டாத இடங்களாகப் பார்த்துப் பார்த்து உட்கார்ந்தது. நானும் வீணே உடம்பை அலட்டிக் கொள்ள விரும்பாமல்,



விரோதி அருகே அணுகி வரட்டும், பார்த்துக் கொள்வோம் என்றிருந்தேன். நான் வாளா இருப்பதைக் காண அதற்குப் பொறுக்கவில்லை. சண்டைக்கு இழுக்கும் நோக்கத்துடன், தணிந்த . மட்டத்தில் பறக்கலாயிற்று. நானும், வந்த சண்டையை விடுவானேன் என்று எண்ணி, வீர கர்ஜனையுடன் இடசாரி வலசாரி பாய்ந்து, வீசி வீசித் தாக்கினேன். என் தாக்குதல்களுக்கெல்லாம் அது தப்பிக் கொண்டே வந்த போதிலும், கடைசியில் அது களைத்துப் போய், என் கைவெட்டும் சமீபமாய் உட்காரவே செய்தது. ஒரே அடியில் 'க்ளோஸ்' செய்திருக்கலாம். ஆனால் நான் அடிக்கவில்லை. ஓங்கிய கையை வாபஸ் வாங்கிக் கொண்டேன். ஏனென்றால், அந்த ஈ ஒரு படத்தின் மேல் உட்கார்ந்திருந்தது. வேறொரு படமாயிருந்திருந்தால், கண்ணாடி உடைந்தாலும் பரவாயில்லை என்று தாக்கியிருப்பேன். ஆனால் அந்தப் படமோ, கருணைக் கடலான புத்தபிரான் படம்! அஹிம்ஸா மூர்த்தியிடம் சரணடைந்த ஜீவனொன்றைக் கொல்ல எப்படி மனம் வரும்?

எனக்கு உண்டான ஞானோதயத்தில், ஈக்கு உயிர்ப் பிச்சை அளிப்பதென்று தீர்மானித்தேன். ஆயினும், என்னைத் தொல்லைப்படுத்தாமல் இருக்கும் பொருட்டு, தற்காப்பு நிமித்தம் அதைச் சிறையில் அடைப்பதென்று முடிவு செய்தேன். சமையலறைக்குச் சென்று, வெல்லத் துண்டு ஒன்றைக் கொண்டுவந்து மேஜை மேல் வைத்தேன். அசட்டு ஈயும் இளித்துக்கொண்டு வந்து, தன்னையும் என்னையும் மறந்து, வெல்லத்தைப் புசிக்க ஆரம்பித்தது. அது தான் சமயம் என்று, ஒரு அட்டைப் பெட்டி மூடியை எடுத்து, சடக்கென்று கவிழ்த்து மூடிவிட்டேன். ஹூம்! இந்த யோசனை முன்னமே தோன்றியிருக்கக் கூடாதா?

நான் சிறை வைத்த இந்த இனத்து ஈயைக் 'காமன் ப்ளை' அதாவது, சாதாரண ஈ என்று இங்கிலீஷில் சொல்லுகிறார்கள். இதுவா சாதாரண ஈ என்று கேட்கிறேன். மனித வர்க்கத்துக்கு ஓயாத் தொல்லை கொடுக்கும் இதுவா சாதாரண ஈ? 'அசாதாரண ஈ' என்றுதான் இதைச்

சொல்ல வேண்டும்! பழைப்பழ வியாபாரிகளையும், மிட்டாய் வியாபாரிகளையும், மளிகை வியாபாரிகளையும், இந்த அசாதாரண ஈக்கள் மொய்த்துத் துன்புறுத்துகின்றன. நிலம் உழுது களைத்துப் போய் மரத்து நிழலில் சிறிது நேரம் இளைப்பாற முயற்சிக்கும் குடியானவர்களை இவை இம்சிக்கின்றன. கைத்தொழில் செய்கிறவர்களையும் ஒரு கை பார்க்கின்றன. தொழிலாளிகளையும், முதலாளிகளையும், உபாத்தியாயர்களையும், மாணவர்களையும், டாக்டர்களையும், நோயாளிகளையும், சோம்பேறிகளையும், சுறுசுறுப்புக் காரர்களையும், நல்லவர்களையும், பொல்லாதவர்களையும் வஞ்சனையின்றி வாட்டுகின்றன.



ஈ நுழையாத இடமே இல்லை எனலாம். எரிகிற அடுப்புகள், எரிமலைகள் நீங்கலாக மற்றெல்லா இடங்களிலும் சுயேச்சையாய்ச் சஞ்சரிக்கின்றன. பாஸ் இருந்தால்தான் பிரவேசிக்கலாம் என்ற விதிகள் உடைய ரேடியோ நிலையங்கள், சட்ட சபைகள், கோட்டைப் பிரதேசங்கள் முதலியவற்றுக்குள் பாஸ் கீஸ் ஒன்றுமில்லாமலே இவை பிரவேசிக்கின்றன. டிக்கெட் வாங்காமலே ரயில் பிரயாணம் செய்கின்றன. டிக்கெட் வாங்காமலே டாக்கி பார்க்கின்றன; பாட்டுக் கச்சேரி கேட்கின்றன. சம்மன் இல்லாமலே பெரிய பெரிய கோர்ட்டுகளில் ஆஜராகி, கட்சிக்காரர்களையும் வக்கீல்களையும் ஜட்ஜுகளையும் ஆட்டி வைக்கின்றன.

இதைச் சொல்வானேன்? ஒரு நாள் ஒரு கொல்லன் பட்டறைக்குப் போயிருந்தேன். என்ன ஆச்சரியம்! அங்கே சில ஈக்கள் உல்லாசமாய்ப் பறந்து கொண்டிருப்பதைக் கண்டேன். "கொல்லன் பட்டறையில் ஈக்கு என்ன வேலை?" என்று கேட்டேன். "அதைத்தான் நானும் கேட்கிறேன்!" என்றான் கொல்லன். அவன் அதோடு நிற்கவில்லை. மேலும் பேசலானான். "இந்த ஈயுங்க, மாடுகளைக் குதிரைகளைத் தொந்தரவு செஞ்சாலும் பரவாயில்லீங்க. ஈக்களை ஓட்டறதுக்குன்னே, அதுகளுக்கு வாலு கொடுத்திருக்காரு கடவுள். வாலில்லாப் பிராணிங்களான நம்மகிட்டே சேட்டை பண்ண வந்தாதானுங்க, ரொம்பக் கஷ்டமா இருக்குதுங்க!" என்றான்.

மொத்தத்தில் ஈக்களினால் கொல்லன் முதல் கவிஞன் வரை எல்லோருக்கும் தொல்லைதான்.

ஈத்தொல்லையைப் பற்றி நினைக்கும்போது, ஈயைப் போலவே கச்சகச்சென்று தொல்லைப் படுத்தும் சில பேர்வழிகளின் ஞாபகம் வருகிறதல்லவா? இந்த இரண்டு கால் ஈக்கள் அழைப்பில்லாமலே உங்கள் வீட்டுக்கு வாயாடவும், வாதாடவும், விருந்தாடவும் வருகிறார்கள். அருவெறுப்பான அசம்பாவிதமான அசந்தர்ப்பமான கேள்விகளெல்லாம் கேட்கிறார்கள். கிட்டக் கிட்ட நகர்ந்து வந்து அருவருப்பான விரல்களால் தொட்டுத் தொட்டுப் பேசுகிறார்கள். ரொம்ப உரிமையுடன் உங்கள் சோபாவில் சப்பணம் கட்டி உட்காருகிறார்கள். ரொம்பச் சவுகரியமாக உங்கள் நாற்காலியில் உட்கார்ந்து மேஜைமேல் காலைத் தூக்கிப் போடுகிறார்கள். உங்களைக் கேட்டு வாங்கி வெற்றிலை போட்டுக் கொண்டு, உங்களைக் கேட்டுக் கொள்ளாமலே ஜன்னல் வழியாய்த் துப்பித் துப்பி, உங்கள் அழகான ஜன்னல் கம்பிகளுக்கு எச்சில் காவி அடிக்கிறார்கள்,

எந்த சாமானையும் சொந்த சாமான் மாதிரி கையிலெடுத்துப் பார்த்து அம்மானை ஆடுகிறார்கள். ஆடிவிட்டு இடம் மாற்றி வைக்கிறார்கள்; அல்லது ஆடும்போதே கை நழுவிக் கீழே போட்டு உடைக்கிறார்கள். உடைந்த உறுப்புக்களைப் பொறுக்கி எறிகிறார்கள்; அல்லது பொறுக்கி எறியாமல் இளித்துக் கொண்டு நிற்கிறார்கள்.

இந்தப் பீடைகளை, வீட்டை விட்டுப் போ என்று ஜாடையாகச் சொன்னாலும் போக மாட்டார்கள்; அப்பட்டமாகச் சொன்னாலும் போகமாட்டார்கள். வைதாலும் போக மாட்டார்கள்; விரட்டினாலும் போகமாட்டார்கள். அப்படியே போனாலும், மறுபடியும் மறுபடியும் திரும்பி வந்து விடுவார்கள்.

பகுத்தறிவு படைத்த இந்த இரண்டு கால் ஈக்கள் படுத்துகிற பாட்டைப் பார்த்தால், பகுத்தறிவில்லாத அசல் ஈக்கள் படுத்துவது, அவ்வளவு மோசமானது அல்லதான். ஐயோ பாவம்! சிறையிலிருக்கும் ஈயை விடுதலை செய்து விடுகிறேன். இரண்டு கால் ஈ யாரேனும் வருவதற்கு முன்னால் வெளியே சென்று விடுகிறேன்!

# கிட்டு செய்த பிசகு

ஸி. ஆர். ராமஸ்வாமி



கிட்டு பள்ளிக்கூடத்தி லிருந்து திரும்பி வந்தான். தங்கச்சி பத்மாவுக்குச் சுரம். தகப்பனார் காலையில் குழந்தைக்கு எவ்வளவு சுரம் என்று பார்த்து விட்டுத் 'தர்மாமீட்ட'ரை மேஜை டிராயருக்குள் வைத்ததைக் கிட்டு பார்த்துக் கொண்டிருந்தான். தனக்கு எவ்வளவு உஷ்ணம் இருக்கும் என்று பார்க்க ஆசைப்பட்டான். பள்ளிக்கூடத்தில் தர்மாமீட்டரைப் பற்றி வாத்தியார் சில தினங்களுக்கு முன் சொல்லிக் கொடுத்திருந்தார். மனிதன் உஷ்ணம் 98 டிகிரியும் கூட 4 சிறு கோடுகளும் இருக்கும் என்று சொன்னாரே, அது நிஜமா வென்று பார்க்க அவன் ஆசைப் பட்டான். அப்பா வீட்டிலில்லை. எனவே, கிட்டு டிராயரைத் திறந்து தர்மாமீட்டரை எடுத்துத் திருப்பித் திருப்பிப் பார்த்தான். அதில் 98 டிகிரிக்குக் கொஞ்சம் மேல் சிவப்புக் கோடு இருப்பதைக் கண்டான். அப்பொழுது அவன் தாயார் அவனை எதற்கோ கூப்பிட்டாள். அவன் தர்மாமீட்டரைத் தகரக் குழாயில் போட்டு மூடி மேஜைமேல் வைத்து விட்டுத் தாயார் இருந்த அறைக்குச் சென்றான்.

மறுபடி திரும்பி வந்தபோது தர்மாமீட்டர் மேஜைமேலிருந்து உருண்டு கீழே விழுந்து கிடந்தது. கிட்டு குழாயைத் திறந்து பார்த்தான். தர்மாமீட்டரின் அடியும் நுனியும் மட்டும் உடைந்து போயிருந்தது. தான் செய்த தப்புக்குப் பயந்துகொண்டு கிட்டு



தர்மாமீட்டரை வீட்டுக்கு வெளியே வீசி எறிந்து விட்டுத் தகரக் குழாயை மட்டும் மூடி முன்னிருந்த இடத்திலேயே வைத்துவிட்டான்.

தகப்பனார் கோர்ட்டிலிருந்து சாயந்திரம் வந்தார். பத்மாவுக்குச் சுரம் அதிகமா யிருப்பதைப் பார்த்து மேஜை டிராயரைத் திறந்து தர்மாமீட்டரை எடுத்து, குழாயைத் திறந்து பார்த்தார். அதில் தர்மாமீட்டர் இல்லாததைக் கண்டு, கிட்டு அதைத் தான் அங்கே வைத்ததைப் பார்த்துக் கொண்டிருந்ததால் அவன்தான் எடுத்திருப்பான் என்று ஊகித்து அவனைக் கூப்பிட்டுக் கேட்டார். கிட்டு தன்னுடைய குற்றத்தை ஒப்புக் கொண்டான். அவன் தகப்பனார் "நீ எடுத்தது



என்னவோ எடுத்தாய். ஆனால் அதை ஏன் வெளியே எறிந்தாய்? செய்த பிசகை மறைக்க அல்லவா அப்படிச் செய்தாய்?" என்று அவனை மிகவும் கடிந்து கொண்டார்.

பத்மாவைப் பார்க்க வந்த டாக்டர் பையன் அழுது கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டு "ஏன் அழுகிறாய்?" என்று கேட்டார்.

"என் தர்மாமீட்டரை உடைத்து விட்டேன். உங்களிடம் தர்மா மீட்டர் இருந்தால் கொடுங்கள்" என்று டாக்டர் கிட்டுவின் தகப்ப னாரைக் கேட்டார்.

"கிட்டு அதை உடைத்து வெளியே எறிந்து விட்டான். அதற்காக அவ னைத் திட்டினேன். அதனால்தான் அவன் அழுது கொண்டிருக்கிறான்" என்றார் கிட்டுவின் தகப்பனார்.

டாக்டர் "அவனைச் சற்றுக் கூப் பிடுங்கள்" என்றார்.

டாக்டரும் தன்னைக் கடிந்து கொள் வார் என்று கிட்டு தயங்கிக்கொண்டே மெதுவாக வந்தான்.

டாக்டர் கிட்டுவின் தகப்பனாரைப் பார்த்து, "உங்கள் பையன் அதை எறிந்துவிட்டது மிகவும் நல்லதா யிற்று. நான் என் தர்மாமீட்டர் உடைந்ததைக் கவனியாமல் நேற்றிரவு ஒரு வியாதியஸ்தரை அதைக் கொண்டு சோதித்தேன். பிறகு ஏன் உஷ்ணம் ஏறவில்லையென்று பார்த்தபோது தான் உடைந்திருப்பது தெரிந்தது.



அவனுக்குப் பாதரசத்தால் விஷம் ஏறாமலிருக்கப் பெரிய சிகிச்சை செய்ய வேண்டியிருந்தது" என்று சொல்லிக் கிட்டுவுக்கு ஒரு ரூபாய் தரப்போனார்.

கிட்டு சற்று நேரம் பேசாமலிருந்து விட்டு "நான் செய்தது தப்பு. அது உடைந்ததை நான் அப்பாவுக்கு அவர் வந்தவுடனே சொல்லியிருக்க வேண் டும்" என்று சொல்லி ரூபாயை வாங்கிக்கொள்ள மறுத்து விட்டான். டாக்டர் அவனைத் தட்டிக் கொடுத்து "நீ மிகவும் நல்ல பையன்" என்றார்.

பத்மா சிரித்துக்கொண்டே டாக்ட ரைப் பார்த்து "மாமா! நீங்கள் கொடுத்த கசப்பு மருந்து சீசாவை உடைத்து அப்பால் போட்டு விட்டு உண்மையைச் சொல்லி விட்டால் எனக்கும் பரிசு தருவீர்களா?" என்று கேலியாகக் கேட்டாள்.



"என்ன அண்ணே! இந்தப் பக்கம் ஒருத்தரையும் காணோமே. இந்தச் சின்ன வாசனை புட்டியை தெரியாமல் எடுத்துக் கிட்டு போயிட்டா என்ன?"

"போடா அற்பப் பயலே! ஒரு ரூபா தராத இந்த சீசாவை எடுத்துக் கொண்டு போகச்சே எவனாவது பிடிக்கக்கிட்டா அவமான மில்லையா?......

......எடுக்கிறதுதான் எடுக்கிறே, அதோ அந்தப் பெரிய புட்டியையும் சேர்த்து எடுத்துக் கொண்டுவாடா, மண்டு!"

. புராதன இரகசிய மூலிகை ஔஷதம் இப்பொழுது

உங்களுக்காக தயாரிக்கப்பட்டுள்ளது




இந்தியாவின் புராதன மூலிகை வைத்தியத்தின் ரகசியங்கள் வெளியாக்கப்பட்டு ஹாம்டார்ட் ஆயின்மெண்டாக உங்களுக்கு அளிக்கப்பட்டிருக்கிறது! இம்மூலிகை ஔஷதம் ஓர் பிரபல மேனாட்டு வைத்தியரின் முறையை அனுசரித்துள்ளது. இது எங்களுடைய ஹாம்டார்ட் தவாகானா ரசாயன சாலையில் நூதன முறையில் தயாரிக்கப்படுகிறது. மற்றக் களிம்புகளைவிட இது அதிக இரும் ரண சக்திகொண்டது. ஒவ்வொரு வீட்டிலும் ஒரு டப்பி அவசியம் இருக்கவேண்டும்

வெட்டுக்காயம், சுடுகாயம், புண், சொறிசிரங்கு, அரிப்பு, படை, ஒட்டுவாரொட்டி, முதலியவைகளுக்கு.

**ஹாம்டார்ட் ஹெர்பல் ஆயின்ட்மென்ட்**

**ஹாம்டார்ட் தவாகானா லெபரேடரீஸ் டில்லி.**
(ஸபி-Safi-என்ற புகழ்பெற்ற ரத்தசுத்தி மருந்து தயாரிப்பவர்கள்)

எல்லா பிரபல கெமிஸ்டுகளிடமாவது அல்லது கீழ்க்கண்ட சப் ஏஜண்டுகளிடமாவது கிடைக்கும்.

சப் ஏஜண்டுகள் :

1. மெஸர்ஸ். ஈஸ்டர்ன் ஏஜன்ஸீஸ், ஷோரனூர்
சேலம், மதுரை, சென்னை, திருநெல்வேலி, செங்கல்பட்டுக்கு :
2. மெஸர்ஸ். கோல்டன் கம்பெனி,
38, டூப்ளே தெரு, பாண்டிச்சேரி
3. மெஸர்ஸ். கமர்ஷியல் ஏஜன்ஸி, 101, ஆண்டார் தெரு, தெப்பக்குளம் போஸ்டு, திருச்சிறுப்பள்ளி

# கைவிடப்பட்ட தருவாயிலும் நம்பிக்கை

ஈரல் குலைக்கட்டி வியாதி முற்றிபோன நிலைமையிலும் கைக்குழந்தைகள் ஜம்மியின் லிவர்க்யூர் "காம்பௌண்ட்" மருந்தினால் பிழைத்திருக்கின்றனவென்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இந்த வியாதியினால் ஏற்படும் சிசுக்களின் மரணத்தை மிகவும் குறைத்தது ஜம்மி லிவர்க்யூர் முக்கிய காரணம் என்பது பிரபல வைத்தியர்களின் அபிப்பிராயம்.

ஆகையினால் மக்களனைவரும் சேர்ந்து எடுத்துக்கொண்டு, குழந்தைகளுக்கு ஈரல் குலைக்கட்டி வியாதி ஏற்படாமல் இருக்கப் பிரயத்தனம் செய்யவும்.

ஜம்மியின் லிவர்க்யூர் 'ஸிம்பிள்', குழந்தை ஈரல் குலை சம்பந்தமான உபாதைகளை சொஸ்தம் செய்து, சீரபுஷ்டி டானிக்காகவும், பசி, ஜீரணசக்தி விருத்தி செய்தும், மலச்சிக்கலைப்போக்கியும், ஈரல், குலையை சரியானபடி வேலை செய்ய உதவுகிறது.

கர்ப்பஸ்திரீகளுக்கு ஜம்மியின் டானிக் கொடுத்திருந்த குழந்தைகளுக்கு ஏற்படும் கருப்புகளீக் ஈரல், குலை நாள்பூனை ஏற்படுகிறது என்ற ஆயுர்வேத சித்தாந்தத்தை சரிவர அனுசரித்து கர்ப்பஸ்திரீகளுக்கென்று தயார் செய்த ஜம்மியின் டானிக்கை, முன்னுல் ஈரல் குலைக்கட்டி வியாதியினால் பீடிக்கப்பட்ட குழந்தைகளின் தாய்மார்கள் உபயோகிக்கலாம்.

## ஜம்மியின் லிவர்க்யூர்

**குழந்தையின், ஈரல் குலைக்கட்டிக்கு ஜம்மியின் லிவர்க்யூர் உபயோகியுங்கள். எல்லா இடங்களிலும் விற்கப்படுகின்றன.**

விவரங்களுக்கு :

ஜம்மி வெங்கட்ரமணய்யா & ஸன்ஸ்
லிவர்க்யூர் க்ளினிக் & ஆபீஸ்
மயிலாப்பூர் :: மதராஸ்
அல்லது
பெரிய தெரு, கும்பகோணம்
அல்லது
தெப்பக்குளம், திருச்சிராப்பள்ளி
அல்லது
ஆர்காடு ஸ்ரீனிவாசாச்சாரி தெரு, பெங்களூர் ஸிடி
அல்லது
'லிவர்க்யூர்' பிராஞ்சு ஆபீஸ் :
பாரேக் மான்ஷன், சாண்டர்ஸ்ட் ரோடு மேற்கு, பம்பாய்-4

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras




# எப்பொழுதும் குறித்த நேரத்தில்

குறித்த நேரத்தில் போய்ச் சேர T.V.S. லாரி ஸர்விஸை நீங்கள் நம்பலாம். தென்னிந்தியாவில் அட்டவணைப் பிரகாரம், குறித்த நேரத்தில் தவறாது போய்ச்சேர உத்திரவாதமளிக்கும் போக்கு வரத்து சாதனம் இது ஒன்றுதான்.

**T. V. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ், லிமிடெட்**

மதுரை & சென்னை.

TVSK 19 TM

போக்கு வரத்து சாதனமளிப்பது எங்கள் தொழில்.

Regd. No. M. 4392